ஜேம்ஸ் ஆலனின்

# வாழ்க்கையை அமைக்கும் எண்ணங்கள்

தமிழாக்கம்

டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தி



கங்கை புத்தக நிலையம்

நல்வாழ்த்துக்களுடன்

45-வது அனைத்து இந்தியக் கூட்டுறவு
வார விழாக் குழு,
ஈரோடு மாவட்டம்.

**1998**

ஜேம்ஸ் ஆலன்

எழுதிய

# வாழ்க்கையை அமைக்கும் எண்ணங்கள்

தமிழில் :

டாக்டர். எம். எஸ். உதயமூர்த்தி





13. தீனதயாளு தெரு

தி.நகர், சென்னை-600 017

| | | | |
|---|---|---|---|
| முதற் பதிப்பு | : | டிசம்பர் | 1989 |
| திருத்திய இரண்டாம் பதிப்பு | : | செப்டம்பர் | 1990 |
| மூன்றாம் பதிப்பு | : | பிப்ரவரி | 1991 |
| நான்காம் பதிப்பு | : | நவம்பர் | 1991 |
| ஐந்தாம் பதிப்பு (கங்கை) | : | நவம்பர் | 1992 |
| ஆறாம் பதிப்பு (கங்கை) | : | ஜூலை | 1993 |
| ஏழாம் பதிப்பு (கங்கை) | : | ஜூன் | 1994 |
| எட்டாம் பதிப்பு (கங்கை) | : | பிப்ரவரி | 1995 |
| ஒன்பதாம் பதிப்பு (கங்கை) | : | ஜனவரி | 1996 |
| பத்தாம் பதிப்பு (கங்கை) | : | அக்டோபர் | 1996 |
| பதினொன்றாம் பதிப்பு (கங்கை) | : | ஜூலை | 1997 |
| பன்னிரெண்டாம் பதிப்பு (கங்கை) | : | ஏப்ரல் | 1998 |



**விலை : ரூ. 20.00**

*ஆசிரியர் முகவரி:*

**டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி**
மக்கள் சக்தி இயக்கம்
17ஏ, சௌத் அவென்யு
காமராஜ் நகர், திருவான்மியூர்
சென்னை – 600 041.

Printed at : Ravi Raja Offset, Chennai - 14.

உங்களிடம் இருக்கிறதா ?

## டாக்டர். எம். எஸ். உதயமூர்த்தி

### எழுதிய பிற நூல்கள்

நம்மால் முடியும் தம்பி—நம்பு !

மனம், பிரார்த்தனை, மந்திரம்

தலைவன் ஒரு சிந்தனை

உயர் மனிதனை உருவாக்கும் குணங்கள்

பிரச்சினைகளுக்கு முடிவு காண்பது எப்படி ?

தட்டுங்கள், திறக்கப்படும் !

நாடு எங்கே செல்கிறது ?

நீதான் தம்பி முதலமைச்சர் !

சிந்தனை, தொழில், செல்வம்

மனித உறவுகள்

ஆத்ம தரிசனம்

நெஞ்சமே அஞ்சாதே நீ !

தன்னம்பிக்கையும் உயர் தர்ம நெறிகளும்

எண்ணங்கள்

*Front Cover Illustration :*

THE NEW CREATION

*Strong, lasting and fragrant, it rises*
*Straight towards the sky.*

—THE MOTHER
Aurobindo Ashram.

## அட்டைப்படம்

பூவைப் பார்க்கின்றேன்—ஆனால்
பூ தெரியவில்லை.
மகிழ்வு பரப்பும் மணத்தை
நினைவின் இனிமையில் நுகர்கின்றேன்.

பூவே, நீ வெறும் தாளல்ல
தாளிலே வரையப்பட்ட நிழற்படமல்ல.
இருபரிமாணத்து நீள அகலமல்ல,
நான்காம் பரிமாணத்து நறுமணம்.

காயாகாமல் கனியாகாமல்
மலர்ப் பருவத்துடன் வாழ்வை முடிக்கும்
மணம்தரு மலரே
நீ தியாகத்தின் சின்னம்

அழகின் உச்சத்தில் மலராகி
ஆன்மாவில் பரப்பும் ஆனந்தம், நீ.
மலர்பேசும் மொழிதான் என்ன ?
ஜீவன் காட்டும் வழிதான் என்ன ?

உன்னைக்கொடு. உலகை உயர்த்து.
அன்பால், தொண்டால் ஜீவனை மலர்த்து.

# உள்ளே . . .

# காணிக்கை

ஜேம்ஸ் ஆலனின் சிந்தனைகளது அருமையினை உணர்ந்து அதை முதலில் தமிழில் தந்து தமிழர்களது, எண்ணங்களையும் செயல்களையும் உயர்த்தப் பாடுபட்ட தியாகி, கப்பலோட்டிய தமிழர்

## வ. உ. சிதம்பரம் பிள்ளை

அவர்களுக்கும்,

வெளிநாடுகளில் கூட தேடியும் கிடைக்காத ஜேம்ஸ் ஆலனின் நூல்களை—மூலத்தின் சுவை குன்றாமலிருக்க— அவர் எழுதிய ஆங்கிலத்திலேயே வெளியிட்ட ஒரு தமிழ்ப்பதிப்பாளர்; ஜேம்ஸ் ஆலன் எழுதிய மொத்த நூல்களையும் ஓரிடத்தில் கிடைக்குமாறு செய்தவர்; இப்புத்தகங்களை வெளியிட்டு தமிழர்களது வாழ்வு மேம்படப் பாடுபட்ட தமிழ்ப் பெருந்தகை; சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் உரிமையாளர்: காலஞ்சென்ற

## சுப்பையா பிள்ளை

அவர்களுக்கும்—

இதை என் அன்புக் காணிக்கையாக் சமர்ப்பிக்கிறேன்.

# ஜேம்ஸ் ஆலன்

## வாழ்க்கைச் சுருக்கம்

எழுதியவர் :
**கப்பலோட்டிய தமிழர்**
**வ. உ. சிதம்பரம் பிள்ளை**

ஜேம்ஸ் ஆலன் இங்கிலாந்து நாட்டிலுள்ள லீசெஸ்டர் (Leicester) என்ற ஊரில் நவம்பர் 28ம் தேதி 1864-ல் பிறந்தார். இளவயதிலேயே படிப்பில் மிக்க ஆர்வம்; தனிமையை நாடும் குணம்; புத்தகங் களைப் படித்து, சிந்தனைகளில் மூழ்கிடும் தன்மை. தன் தந்தையை ஆத்மா சம்பந்தமாக, வாழ்க்கை தத்துவம் சம்பந்தமாக, கேள்விகள் கேட்டுத் துளைப் பார். பின் தானே அவற்றிற்கு விடை சொல்ல முன் வருவார். இது அவர்களது பெற்றோரை அதிசயத்தி லாழ்த்தியது. "மகனே! இவ்வளவு தீர்க்கமாக எல்லா வற்றையும் சிந்திக்கும் அறிவு ஒரு தலைமுறையில் இப்பிறவியில் உனக்கு வந்ததென்று நம்பமுடியவில்லை. முற்பிறவியில்—பல பிறவிகளில் நீ இதைப் பெற்றிருக்க வேண்டும்," என்று அவர் தந்தை கூறுவார்.

இளைஞன் ஆலனுக்கு பலகீனமான உடம்பு. இருந்தும் வாழ்வின் பிரச்சினைகளையும், ஆத்மாவை யும் பற்றியும் ஆழமாக யோசித்தார். ஆராய்ந்து கொண் டிருந்தார். "இப்படி நீ சிந்தனையில் மூழ்குவா யானால் உன் உடல் நலம் பாதிக்கப்படும்" என்று

சொன்னார்கள் ; தந்தை பலமுறை கூறினார். "ஆலன்! இப்படி மூளையைப் போட்டு கசக்கினால், இளவயதில் செத்துப் போவாய்" என்று. பிற்காலத்தில் ஆலனுக்கு தந்தையின் வாசகங்கள் நினைவுக்கு வரும் ; மனத்திற்குள் சிரித்துக் கொள்வார். அவர் தனது 48-வது வயதில் காலமானார்.

எதைச் செய்ய வேண்டுமோ அதை ஒரு மன உறுதியுடன் சரியான காலத்தில் செய்து முடிப்பார். எந்த வேலையையும் அரை குறையாகச் செய்ய மாட்டார் ; அரை மனத்தோடும் எதையும் செய்ய மாட்டார். எதை எடுத்தாலும் அதை நன்றாக, முழுமையாக சிறப்பாகச் செய்வார். பல உயர் நிலைகளை அவர் எய்தியதன் அடிப்படை, மனத்தை ஒருமுகப்படுத்தும் திறனும் அதை நடைமுறைக்கு உபயோகித்து பலன் காணும் பக்குவமும் அவர் பெற்றிருந்ததுதான். படிப்பு, விளையாட்டு, உணவு, தூக்கம் போன்ற எல்லாவற்றையும் ஒரு ஒழுங்குடனும் சரியான முறையுடனும் செய்வார்.

வாலிப வயதில் நண்பர்களுடன் மாலையில் காலாற நெடிய தூரம் நடப்பார். வழியில் இயற்கையின் அழகுகளை ரசிப்பார். காட்டு விலங்கானாலும் கூட அண்மையில் சென்று பார்ப்பார். அதன் குணங்களை ஆராய்வார் ; அவற்றிடம் அன்பு காட்டுவார் இந்தப் பிராணிகள்கூட அவரிடம் நெருங்கி வரும் ; அவர் சொல்லுக்கு கட்டுப்படும் ; அன்புடன் கீழ்ப்பணியும்.

அவருக்கு பதினைந்து வயதாகும்போது அவரது தந்தை தனது சொத்தை எல்லாம் இழந்தார் ; தன் குடும்பத்தைக் காப்பாற்ற வேலை தேடி அமெரிக்கா சென்றார். துரதிர்ஷ்டவசமாக வந்த இரண்டு நாளில் கொலை செய்யப்பட்டு, அமெரிக்க மருத்துவமனை

ஒன்றில் இறந்து போனார். அவர் விட்டுச் சென்ற சொத்து, ஆலனின் தந்தை நெடுநாள் உபயோகித்த வெள்ளி கைக்கடிகாரம்தான். தந்தையின் மறைவுக் குப்பின், ஜேம்ஸ் ஆலன் ஒரு நாளைக்கு 15 மணி நேரம் உழைத்து தன் குடும்பத்தைக் காப்பாற்றினார். விதவையான தாய், இரண்டு இளைய சகோதரர்கள், ஜேம்ஸ் — குடும்பத்தில் மொத்தம் நான்கு பேர். அப்போதும் கூட மூன்று நான்கு மணி நேரம் படிப்பிற் காகச் செலவிடுவார்.

"கடுமையாக உழைப்பது பல மொழிகளைக் கற்றுக் கொள்வதற்குச் சமமானது" என்று ஜேம்ஸ் ஆலன் கூறுவார். 1902 வரை பல அலுவலகங்களில் அலுவலக உதவியாளராகப் பணியாற்றினார்.

தனது 17 வயதில் ஷேக்ஸ்பியரது நாடகங்களைப் படித்தார். பல பகுதிகளை மனப்பாடம் செய்திருந் தார். படித்த காலத்திலும், பின்னாலும் வாழ்க்கையில் அவருக்கிருந்த ஒரே ஒரு குறிக்கோள். 'ஆத்ம ஞானம்' பெறவேண்டுமென்ற அவாதான். அதைப் பெற பல நூல்களைப் படித்தார்.

மனிதன் இவ்வுலகில் அன்றாட வாழ்வில் அநு பவிக்கும் துன்பங்களும் சங்கடங்களும் தான் நரகம் என்பதும் அவன் இப்பூமியில் அநுபவிக்கும் இன்பங்கள் தான் சொர்க்கம் என்பதும், இதற்கு மேலே சொர்க்கம் நரகம் என்று ஏதும் இல்லை என்பதும் அவரது முடிந்த முடிவு.

நல்லொழுக்கம்தான் சிறந்த ஆபரணம் என்று கருதினார். பிறப்பால் ஆங்கிலேயர் ஆனாலும், புலால் உண்பது, மது அருந்துவது, மாலையில் பெண்களுடன் உல்லாசமாகப் போவது போன்ற பழக்கங்களைத் தவிர்த்தார். அவர் வாயிலிருந்து உதிர்ந்த வார்த்தைகள் இதமானவை; பொருள் பொதிந்தவை. தீய மன முடையோர்கூட அவர் சகவாசத்தால் நல்லவர்

ஆனார்கள். இதை நிரூபிக்கப் பல சம்பவங்களைக் கூறலாம்.

ஒரு சம்பவம்; வேலை செய்த இடத்திலே இருந்த தொழிலாளர்கள் கொச்சையாகவும், பச்சை யாகவும் பேசிவந்த பழக்கத்தை அவர் சென்றவுடன் அறவே நிறுத்தி விட்டார்கள்.

தனது 24 வயதில் எட்வின் ஆர்னால்டு எழுதிய ஆசிய ஜோதி என்ற புத்தருடைய வாழ்க்கை வரலாற்று நூலை (ஆங்கில) நூலைப் படித்தார், அந்தப் புத்தகம் அவருக்கு ஆத்ம அறிவைத் தந்தது. அதிலிருந்து அதிகமாக, கிழக்கத்திய இலக்கியங்களைப் படிக்கத் துவங்கினார். நமது நாட்டு நூல்களைப் படிப்பதில் அவருக்கு தனி ஆர்வம். அடிக்கடி அவர் கூறுவதுண்டு. "ஆத்ம ஞானத்தின் மிகப்பெரிய பொக்கிஷம் கிழக் கத்திய நாடுகள் தான்." நம் நாட்டின் மதக் கொள்கை களும், வாழ்க்கைப் பண்புகளும் அவரது ஒவ்வொரு வார்த்தையிலும் மிளிர்ந்தன.

''ஆத்ம ஞானத்திற்கும் வாழ்வின் உயர்நிலை களுக்கும் திறந்த மனமும், தவறைத் திருத்திக் கொள்ளும் மனோபாவமும் மிக முக்கியம்'' என்பது அவரது கொள்கை. எனவே வாழ்வைவிட, நல் லொழுக்கம்தான் மிக முக்கியம் என்பதை லட்சியமாகக் கொண்டிருந்தார்.

தனது 30-வது வயதில் லில்லி என்ற ஆங்கிலப் பெண்மணியைத் திருமணம் புரிந்து கொண்டார்.

அவருடைய ஆத்மா, மனம், உடல் என்ற மூன்றுக்கும் ஈடற்ற உறுதுணையாக இருந்தார் அந்த பெண்மணி. 32-வது வயதில் பெண் குழந்தை பிறந்தது. அதற்கு நோரா என்று பெயரிட்டார்.

அந்தக் குழந்தை பிறந்ததிலிருந்து எல்லாவித உடலுறவு இன்பங்களையும் கைவிட்டார் ; அந்த எண்ணங்களையே கைவிட்டார். காலை மூன்று மணிக்கு எழுவார், உடன் தியானத்தில் அமர்வார். பின் மலைப்பக்கம் தனியாக நடந்து போவார், ஆத்ம விசாரணை சம்பந்தமான எண்ணங்களிலே மூழ்கிப் போவார். அவரது உதவியை நாடி வந்தவர்களுக்கு, ஆத்ம ஞானத்திற்கு வழிகாட்டினார் ;! போதித்தார். "உள் மனத்தில் எழும் எண்ணங்கள் தான் வெளி உலகின் சூழ் நிலைகளாக அமைகின்றன. புற வாழ்வில் தனக்கு நேரும் கெட்ட சம்பவங்களைத் தவிர்க்க வேண்டுமானால் தனது உள்மன சித்தனை களைச் சீர் செய்ய வேண்டும்." இந்த இரண்டு விஷயங்களும் தான் அவரது முக்கிய போதனைகள்.

அவர் தம் வாழ்நாளில் பத்தொன்பது நூல்களை எழுதினார். கடைசி ஒன்பது ஆண்டுகளில்தான் அவர் எழுதினார்.

அவர் எழுதிய பல நூல்களும் அவருக்கு நிரத்தர புகழைச் சேர்க்கின்றன. அவரது அறிவின் ஆழத்தை யும், அவரது சொல்லின் வலிமையையும் கண்டு, படிப்போர் வியக்கின்றனர் ; பாராட்டுகின்றனர். "பகுத்தறிவின் ஒளி" என்ற மாதப் பத்திரிகை ஒன்றை அவர் நடத்தி வந்தார். பின்னால் அவர் மனைவி வேறு ஒரு பெயரில் இப்பத்திரிகைப் பணியைத் தொடர்ந்தார்.

தமது உடல் நலம் குறைந்த போதும், அவரது அந்திய காலத்திலும், அவர் தனது தியானத்தை, கடவுள் பக்தியை, தர்ம காரியங்களை ஒரு நாளும் விட்டதில்லை ; அல்லது அதில் தளர்வுற்றதில்லை. அவரது உடல் நலத்தைப்பேண அவர் மனைவியும் நண்பர்களும், "அவரது பல்வேறு அலுவல்களையும்

குறைத்துக் கொள்ள வேண்டும்'' என்று அறிவுரை கூறும்போது ''வேலை செய்வதற்காகத்தான் இந்த உடலுடன் நான் பிறந்திருக்கிறேன்'' என்று அவர் கூறுவதுண்டு. ''எனது பணிகளைச் செய்யத்தான் இந்த உடலில் நான் வசிக்கிறேன். அது முடிந்ததும் இவ்வுடலை விட்டுவிடுவேன். நீங்கள் கவலைப்பட வேண்டாம்,'' என்று சொல்வார்.

1912 ஜனவரி 12-ம் தேதியிலிருந்து எல்லாவித வேலைகளிலிருந்தும் விடுபட்டு மனைவியிடமும் நண்பர்களிடமும், எல்லா வேலைகளையும் முடித்து விட்டதாகவும், தான் தந்தையிடம்— ஆண்டவனிடம்— செல்லத் தயார் செய்து கொண்டிருப்பதாகவும் கூறினார். பிறகு பல நல்ல விஷயங்களை பலருக்கும் உபதேசித்தார்.

அத்தகைய அமைதியான ஒரு நாளில் அமைதியாகப் பேசிக்கொண்டிருந்தபோது அவர் உயிர் பிரிந்தது ; மோட்சத்தை அடைந்தது. நாள் 1912 ஜனவரி 24. இந்து முறைப்படி அவர் உடல் தகனம் செய்யப் பட்டது. ஆத்ம ஞானம் என்ற ஒளியைப் போர்த்திய அவரது ஆத்மா இவ்வுலகில் ஒளி வீசிக்கொண்டிருக் கிறது.

[கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் தமிழில் எழுதிய இந்த வாழ்க்கைச் சுருக்கத்தை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து ஜேம்ஸ் ஆலனின் ஆங்கில நூலில் வெளியிட்டார்கள். அந்த ஆங்கில கட்டுரை யிலிருந்து இது மீண்டும் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது.]

**—எம். எஸ். உதயமூர்த்தி**

# முன்னுரை

எனது ஞான குரு என்று நான் போற்றும் மனிதர் ஜேம்ஸ் ஆலன். வாழ்வின் ஆழமான இடத்திற்குச் சென்று, ஜீவனின் மூலாதாரத்தைத் தொட்டு, அதை அன்றாட உலகில் வாழ, வழி முறைகளை சொல்லிக் கொடுப்பவர் ஜேம்ஸ் ஆலன்.

ஜேம்ஸ் ஆலனின் நூலை முதன் முறையாக ஒரு முப்பது ஆண்டுகளுக்கு முன்பு நான் படித்தேன். அது என் மனத்தில் ஒரு மாறாத முக்கியத்துவத்தைப் பெற்றது. அப்போது அவரது புத்தகம் ஒரு மகத்தான புத்தகம் என்று தெரிந்தாலும், அதனுடைய முழு ஆழத்தையும், அதன் முழுப்பலனையும், அது தெரிவித்த எல்லாக் கருத்துக்களையும் என்னால் பூரணமாக உணரமுடியவில்லை. ஆனால் கடந்த 18 ஆண்டுகளாக விடாது தொடர்ந்து அவரது ("AS A MAN THINKETH") "மனிதன் எண்ணுவதுபோல" என்ற ஒரு நூலைப் படித்து வருகிறேன். கடந்த பல ஆண்டுகளாக காலையில் எழுந்ததும் அதில் சில பக்கங்களைப் படிப்பதை வழக்கமாகக் கொண்டிருக்கிறேன். சில பக்கங்கள் அல்ல ; சில சமயம் சில வாக்கியங்களைப் படித்துவிட்டு அதிலேயே தோய்ந்து நேரத்தை மேற்கொண்டு அது பற்றி சிந்திப்பதில் செலவிடுவதுண்டு.

வாழ்வின் பேருண்மைகள் எனக்கு ஒவ்வொன்றாக விளங்கின. என்னென்ன உண்மைகள் அவை என்றோ அவை எப்போது எந்த இடத்தில் எனக்கு புரிய ஆரம்பித்தன, என் மனத்தில் விரிய ஆரம்பித்தன என்றோ

சொல்வது இயலாத காரியம். ஜேம்ஸ் ஆலன் கூறி இருப்பதை ஒட்டி நானாக சில கருத்துக்களுக்கு —முடிவுகளுக்கு வந்தேன்.

"எண்ணங்கள்" என்ற எனது முதல் மனவியல் நூலில் ஜேம்ஸ் ஆலனின் தாக்கத்தையும், விரிவான விளக்கங்களையும் முதல் சில கட்டுரைகளில் காணலாம். மற்றபடி 'எண்ணங்கள்' புத்தகம் ஆக்க சக்தி படைத்த மனத்தின் பல இயல்புகளையும், பயிற்சிகளையும் அதன் பலன்களையும் கூறுகிறது.

ஜேம்ஸ் ஆலன் "வாழ்வில் மறைந்து கிடக்கும் பல நியாயங்கள் இருக்கின்றன. அவை தான் நம் வாழ்வை இயக்குகின்றன," என்று எழுதுகிறார். உண்மையிலேயே ஜேம்ஸ் ஆலனின் நூல்களில் பல விஷயங்கள் தெளிவாக, வெளிப்படையாக, எல்லோரும் புரிந்து கொள்ளும்படி இருந்தாலும், —பல உண்மைகள், —சிற்சில வாக்கியங்களிலே மறைந்து கிடக்கின்றன.

உதாரணமாக :-

மனித ஜீவன் எண்ணங்களால் உருவாக்கப் பட்டது. (THOUGHT EVOLVED BEING) என்பதும்,

நல்லெண்ணங்களால் பெறப்பட்ட வெற்றி சரியாக கண்காணிக்கப்பட்டால் தான் நிலைத்து நிற்கும் என்பதும்,

வாழ்வில் மறைந்து கிடக்கும் சில நியாயங்கள் வாழ்வை இயக்குகின்றன, அவற்றைப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதும்,

எத்தகைய எண்ணங்கள் எத்தகைய பழக்க வழக்கங்களையும் அதன் விளைவாக எத்தகைய சூழ்நிலைகளையும் நம் வாழ்வில் உருவாக்குகிறது என்ற தொகுப்பும்,

மகிழ்ச்சிகரமான எண்ணங்களைப் போல நல்ல மருத்துவன் யாரும் இல்லை என்பதும்,

ஒரு காரணத்திற்காக— வளர்ச்சிபெற வேண்டித்தான், ஒரு மனிதன் ஒரு இடத்தில் வைக்கப்பட்டிருக்கிறான் என்பதும்,

எதை மனம் ரகசியமாக அவாவுகிறதோ அதை அது ஈர்க்கிறது என்பதும்,

மகத்தான லட்சியத்தை மனத்தில் கொண்டு நம் சக்தியை ஒருமுகப் படுத்தும்போது அது சாதனையாக மாறுகிறது என்பதும்,

இந்நூலில் தெளிவாகவும் — மறைந்தும் — கிடக்கும் உண்மைகள்.

சில கருத்துக்களில் தோய்ந்து துருவித் துருவி ஆராய்ந்து பார்த்தபோது ஏதோ பெரிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பையே கண்டது போல் மகிழ்ச்சி ஏற்பட்டதுண்டு எனக்கு.

மனவியலைப்பற்றி என் ஆர்வத்தைத்தூண்டியதற்கு ஜேம்ஸ் ஆலனது நூல்களும் ஒரு காரணம். மனவியல் சம்பந்தமாக நான் எழுதி இருக்கும் 14 நூல்களிலும் வாழ்வின் சில அடிப்படை உண்மைகளை தெளிவுகளை நீங்கள் காணக் கூடும். ஒரு வேகமும், ஒரு உறுதியும் ஒரு உண்மை ஒளியும் அவற்றில் தென்பட்டால் அதற்கு அடிப்படை அமைத்துக்கொடுத்தவர் ஜேம்ஸ் ஆலன் தான்; சொற்களின் வலிமைக்குத் துணை நின்றது பாரதியின் நினைவுகள்தான்.

மனத்தில் நாம் கொண்டிருக்கும் எண்ணங்களுக்கேற்ப நம் சூழ்நிலை அமைகிறது. நாம் எந்த சூழ்நிலையை விரும்புகிறோமோ அதற்கேற்ப மன எண்ணங்களை அமைத்துக் கொண்டால் வாழ்வு நாம் விரும்புகிறபடி அமையும் என்கிற உண்மை சாதா

ரணமான விஷயமல்ல. உலகின் மகத்தான கண்டு பிடிப்பு என்றே சொல்ல வேண்டும்.

இவ்வுலகில் வாழும் நாம் எல்லோரும், மகிழ்வுடனும், வளத்துடனும் வாழ விரும்புகிறோம். அப்படி என்றால் ஏன் அதற்கேற்ற எண்ணங்களை நம் மனத்தில் விதைத்து, வளர்த்து, கண்காணித்து பலன் பெறக்கூடாது? விஷயம் இவ்வளவு எளிதாக இருக்கும்போது ஏன் நம் குழந்தைகளுக்கு ஆரம்பப் பள்ளிக்கூடத்திலிருந்து உயர்நிலைப்பள்ளி வரை தொடர்ந்து சொல்லிக் கொடுத்து இதை மனப்பழக்கமாக ஆக்கக்கூடாது? ஏன் அவர்கள் ஒரு நல் வாழ்வு வாழ வழி காட்டும் அத்தகைய கல்வியில் நாம் கவனத்தைச் செலுத்தக் கூடாது?

செய்கிறோமா நாம்?

அதே போல இன்று நாடு இருக்கும் அவல சூழ்நிலைக்கு பெரும்பான்மையோர் கொண்டிருக்கும் எண்ணங்கள்தான் காரணம். மனித சமுதாயம் என்பது கூட்டு எண்ண சக்தி என்பதையும், இந்த கூட்டு எண்ண சக்தியை நெறிப்படுத்துவதன் மூலம் ஒரு நல்ல சமுதாயத்தை நாம் உருவாக்க முடியும் என்பதையும் நாம் உணர்ந்திருக்கிறோமா? பயன் படுத்துகிறோமா?

தனிமனித முன்னேற்றத்திற்கு ஜேம்ஸ் ஆலன் கூறும் சிந்தனைகளை நாம் மொத்த சமுதாயத்திற்கும் பயன்படுத்தலாம்; பயன் பெறலாம்.

எண்ணம்தான் மூலக் கரு என்பதை சமுதாய நிகழ்ச்சிகளிலிருந்தும், ஒரு நாட்டின் சரித்திரத்திலிருந்தும் உணரலாம். ஒரு உதாரணம்:

இலங்கையில் இன்று நடக்கும் உள்நாட்டுப் போருக்கும் அமைதியின்மைக்கும் காரணம் ஒரு எண்ணம்; திருமதி சிரிமாவோ பண்டார நாயகா

கொண்டிருந்த எண்ணம் ; ''தமிழர்களுக்கு சம உரிமை கொடுக்கக் கூடாது ; அவர்களை ஒடுக்க வேண்டும்'' என்ற சிரிமாவோவின் எண்ணம் ஈழத்தமிழர்களிடையே செயலற்ற நிலையையும், வேதனையையும், போராட்ட உணர்வையும் தனிநாடு என்ற முடிவிலும் கொண்டு விட்டு இன்று நாடே அல்லோலகல்லோலப்பட்டுக் கொண்டிருக்கிறது. எண்ணிப் பாருங்கள், ஒரு எண்ணம் — தீய எண்ணம் — எத்தகைய விளைவுகளை ஏற்படுத்துகிறது ? ஜேம்ஸ் ஆலன் கூறுகிறார் : சுயநல மிக்க எண்ணங்கள் துன்பச் சூழ்நிலையை உண்டு பண்ணுகின்றன என்று. இலங்கை ஒரு நல்ல உதாரணம்.

சந்தேகத்தையும், பயத்தையும் விதைத்தால் தோல்வி, வறுமை என்ற சூழ்நிலைதான் உருவாகும் என்கிறார். வளங்கொழித்து அமைதியாக இயங்கிக் கொண்டிருந்த நாட்டில், ஒரு நாட்டுத்தலைவி பரப்பிய தீய எண்ணம், சுயநலம், பயம், சந்தேகம் எல்லாம் என்ன விளைவுகளை ஏற்படுத்தி இருக்கின்றன என்று எண்ணிப் பாருங்கள்.

சரித்திராசிரியர்கள் இத்தகைய சரித்திர சம்பவங் களைப் பின்னோக்கிப் பார்க்கும்போது ''இந்த விளைவுகள் அந்நாட்டுத் தலைவர்கள் எடுத்த முடிவு களால் விளைந்தவை,'' என்று பொதுவாக எழுது கிறார்கள். அவர்கள் அடிப்படை உண்மைக்கு ஒருபடி முன்னதாக நிறுத்திக் கொள்கிறார்கள் ; அவர்கள் கடைசி வரை செல்வதில்லை.

சிரிமாவோ பண்டார நாயகா எடுத்த முடிவுக்குப் பின்னால்—அப்பால்—இருப்பது என்ன ? ஒரு எண்ணம். தீய எண்ணம். சுயநல எண்ணம். பொறாமை எண்ணம். ஒரு சிறுபான்மையோருக்கு அநீதி இழைக் கும் எண்ணம்.

தலைவன் எடுத்த முடிவுக்குப் பின்னால் நல்லெண்ணம் இருக்கிறதா இல்லையா? இல்லை என்றால் அதன் விளைவு என்னாகும் என்பதை, என்றைக்கு தெளிவாக விரிவாக சரித்திராசிரியர்கள் எடுத்துக் காட்டுகிறார்களோ அன்றுதான் வாழ்க்கைத் தத்துவமும் நாட்டு சரித்திரமும் ஒன்று சேரும்; அன்றுதான் உள் மன இயக்கங்களுக்கும் வெளி உலகில் நடக்கும் சரித்திர சம்பவங்களுக்குமுள்ள தொடர்பு புரியவரும்; என்று சரித்திராசிரியன் தத்துவ நோக்கில் சரித்திர நிகழ்ச்சிகளை ஆராயக் கற்றுக் கொள்கிறானோ அன்று தான் ஒரு நாட்டுத் தலைவன் பயன்பெற முடியும். அன்று தான் நாடும் மக்களும் சரித்திரத்தைத் தாண்டிய ஒரு உண்மையின் அடிப்படையில் நிற்பார்கள்; உயர்வார்கள். மனித சமுதாயம் உயரும்.

சரித்திர முடிவுகளை எல்லாம் நல்லெண்ணம் என்ற அடிப்படையில் வைத்து ஆராய நாம் கற்றுக் கொள்ள வேண்டும். ஜேம்ஸ் ஆலனின் எண்ணங்களின் விரிவாக்கம் இதுதான்.

ஜேம்ஸ் ஆலனின் மற்றோர் எண்ணத்தையும் அதன் விரிவாக்கத்தையும் பார்ப்போம் :

"நல்லெண்ணத்தின் விளைவாக ஏற்பட்ட வெற்றி சரியாக கண்காணிக்கப்படாவிட்டால் வீழ்ச்சியின் வித்து அங்கே விதைக்கப்பட்டிருக்கிறது; சரிவு வந்து சேரும்" என்ற கருத்தைக் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள்.

"நான் உச்சத்தை அடைந்து விட்டேன், இனி யாரும் என்னை எதுவும் செய்ய முடியாது!" என்று எண்ணும் ஒரு தனிமனிதன், அல்லது ஒரு நிறுவனம், அல்லது ஒரு நாடு, என்னாகும்? சரிவை நோக்கிப் போகும். வெற்றி நிலைபெற வேண்டுமானால் கண்காணிப்பு தேவை.

இதைத்தான் இந்தியாவில் காந்திய சகாப்தத்திற்குப்பின் ஏற்பட்ட சரிவில் காண்கிறோம்.

இந்தியா சுதந்திரம் பெற்ற ஒரு பதினைந்து ஆண்டுகள் வரை இருந்த காந்திய நெறிகள் ஒரு உயர் சமுதாயத்தை உருவாக்கி இருந்தன. மக்களும். அரசாங்க அதிகாரிகளும், அரசியல் வாதிகளும், ஆட்சி புரிவோரும், தர்ம நெறிகளுக்குப் பயந்தார்கள்; கட்டுப்பட்டு நடந்தார்கள். தன்னலமற்று பொது நலத்தால் தூண்டப்பட்டார்கள். நாட்டுக்காக தியாகம் செய்தார்கள்.

அதற்குப்பின் கண்காணிப்போர் இல்லை, தவறைச் சுட்டிக்காட்டித் திருத்தப் பெரியவர்கள் இல்லை. அடுத்ததாகப் பிற நாடுகளில் ஜனநாயக நெறிகளைக் கண்காணிக்க நீதி மன்றம், சட்டசபை, நிர்வாகம், பத்திரிகைகள் போன்ற கண்காணிப்பு அமைப்புக்கள் இருந்தன. அந்த அமைப்புக்கள் நம் நாட்டில் கொஞ்சம் கொஞ்சமாகப் பலமிழந்து வந்ததன் விளைவைத்தான் இன்றைய நிலையாக—தார்மிக உணர்வுகள் தாழ்ந்த நிலையாக—நாட்டில் காண்கிறோம். காந்தீயம் தந்த வெற்றியும், தூய்மையும் பொது வாழ்வில் கண்காணிக்கப்படவில்லை. இதனால் பொது வாழ்வில் சரிவு ஏற்பட்டது.

இப்படிப் பல உதாரணங்களை நாம் கொடுக்க முடியும். ஜேம்ஸ் ஆலனின் கருத்துக்களைச் சிந்திக்க, சிந்திக்க எத்தனையோ உண்மைகள் தெரிய வருகின்றன; பல கண்டுபிடிக்கப்பட இருக்கின்றன.

சில விளைவுகளை வாழ்வில் நாம் அனுபவிக்கும் போது "இப்படி நம்மை ஏமாற்றி மோசஞ்செய்து விட்டார்களே!" என்று புலம்புகிறோம். "இப்படிப் பட்ட வறுமை வந்து வாய்த்ததே, இப்படி இழக்க நேரிட்டதே" என்று பலர் வருந்துகிறார்கள்.

அதாவது, வாழ்க்கையில் நேரும் சம்பவங்களைப் பார்த்து "ஏன் இப்படிப்பட்ட துன்பம் எனக்கு நேர்ந்தது?" என்று மனம் தவிக்கிறோம்.

அப்போது உடனே கடவுள் தோன்றி "மகனே! நீ இன்ன எண்ணம் கொண்டு, இன்ன காரியம் செய்தாய். அதன் விளைவுதான் இது!" என்று கூறினாரானால் நாம் ஜென்மத்திற்கும் அந்த தவறைச் செய்வோமா? மாட்டோம்! ஆனால் ஆண்டவன் அப்படி நமக்கு தோன்றி விளக்கம் கொடுப்பதில்லை. "எது, ஏன் ஏற்படுத்துகிறது?" என்ற காரண காரியத் தொடர்பை யாரும் விளக்குவதில்லை. இதை மட்டும் நாம் புரிந்து கொண்டுவிட்டோமானால் மறந்தும் சில தீய காரியங்களையோ அல்லது அதை ஊக்குவிக்கும் எண்ணங்களையோ மனத்தில் போடமாட்டோம்.

நம் வாழ்வில் நடக்கும் சம்பவங்களுக்கும் நம் எண்ணங்களுக்கும் நேர் தொடர்பு இருக்கிறது. அதைப் புரிந்துகொண்டு, கண்டுபிடித்து வாழ்க்கை நடத்துங்கள் என்கிறார் ஜேம்ஸ் ஆலன். இது நம்மை நாமே சுய ஆராய்ச்சி — சுய சோதனை — செய்ய வேண்டிய விஷயம். இதன் மூலம் நம் வாழ்வை இயக்கும் உண்மைகளை உணர்ந்து அடுத்த முறை அப்படி செய்யவோ, செய்யாமலிருக்கவோ முடியும்.

மேற் கூறிய மூன்று விஷயங்களும் ஜேம்ஸ் ஆலனின் எண்ணங்களது—கருத்துக்களது—விரிவாக்கம் தான்.

வாழ்வின் ஆரம்பக் கட்டத்தில் சிலர் இருக்கிறார்கள். வாழ்வின் உண்மைகளைப் புரிந்து கொள்ளாமலே வாழ்வின் அந்திம கட்டத்திற்கு வந்தவர்கள் சிலர் இருக்கிறார்கள். வாழ்வின் உண்மைகளை மட்டும் இவர்கள் எல்லோரும் தெரிந்து கொண்டால் எத்தகைய அற்புத வாழக்கையை வாழ முடியும்! எண்ணிப் பாருங்கள்.

இதை எல்லாம் தெரிந்து கொள்ளாமலே, உண்டு உறங்கி குழந்தை குட்டிகளைப் பெற்று பின் மடிகிறார்களே, அவர்களது பரிதாப நிலையை எண்ணிப் பாருங்கள். இந்த உண்மைகளை எல்லோருக்கும் அளித்து மொத்த சமுதாயத்தையும் உயர்த்த ஒரு சிலராவது முன்வர வேண்டும். எண்ணம் பற்றிய உண்மைகள் — வாழ்க்கை பற்றிய தத்துவங்கள்— பள்ளியில் சொல்லிக் கொடுக்கப்பட வேண்டும்; வீட்டில், குடும்ப வளர்ப்பில் அவை இடம்பெற வேண்டும். அப்போதுதான் அடுத்த தலைமுறையாவது நல்ல விதத்தில் அமையும்.

நான் இந்த மொழி பெயர்ப்பை கடந்த இரண்டாண்டுகளுக்கு மேலாகச் செய்து வந்தேன் என்றால் நம்புவதற்கு கஷ்டமாயிருக்கும். ஆனால் அது உண்மை. நான் எழுதியவற்றுள் பலமுறை—பலமுறை எனது திருத்தங்களுக்கு ஆளானது இந்த ஒரு நூல் தான். மொழி பெயர்ப்பைப் பற்றி பண்டிதர்களுக்கு ஒரு வார்த்தை. ஜேம்ஸ் ஆலன் மிகச் செறிவோடு எழுதி இருக்கிறார். செறிவு, அடர்த்தி, கனம். எழுத்துக்கு எழுத்து இதை மொழி பெயர்க்காமல் கருத்துக்களைத் தெளிய வைக்கும் பணியில் கவனம் செலுத்தி மொழி பெயர்த்திருக்கிறேன். சிறிய வாக்கியங்களில் கருத்துக்களைத் தந்திருக்கிறேன். சொல்லோட்டத்தை இதில் கொண்டுவர முயன்றிருக்கிறேன்.

மற்றபடி உயர்திரு வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களும், பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரை அவர்களும், இந்நூலை முன்பே தமிழில் மொழி பெயர்த்திருக்க ஏன் நான் இதை எடுத்துக் கொண்டேன் என்று நீங்கள் கேட்கக்கூடும்.

வ.உ.சி. அவர்களது தமிழ் அன்று பழக்கத்திலிருந்த கடின நடையில் அமைந்ததும், பிறவற்றில் ஜீவனில்லாத

குறையை நான் கண்டதும்தான் இந்த முயற்சிக்கு காரணம். அவர்களைக் குறை கூறும் நோக்கில் இதை எழுதவில்லை. ஜேம்ஸ் ஆலனின் கருத்துக்களைத் தமிழில் தருவது என்ற மகத்தான பணியைச் செய்தவர்களுக்கு தலை வணங்குகிறேன்.

சொல்லப் போனால் ஜேம்ஸ் ஆலனின் இந்த நூலை நான் மொழி பெயர்த்த காரணம் ;

எத்தனையோ ராமாயணங்கள் இருந்தும் கம்பர் "ஆசை பற்றி அறையலுற்றேன் !" என்று எழுதினாரே, அதுபோல ஜேம்ஸ் ஆலனின் எண்ணங்களின் மீது நான் கொண்டிருந்த தணியாத ஆர்வம், ஈடுபாடு, மதிப்பு, ஐக்கியம்—இவை தான்.

"எண்ணம் போல் ஆகிறோம் ; எண்ணங்கள் தான் நம் வாழ்வை அமைக்கின்றன ; எண்ணங்கள் தான் உலகை ஆள்கின்றன" என்று உபநிடதம் கூறுகிறது ; புத்தர் கூறுகிறார் ; பைபிள் கூறுகிறது ; எமர்சன் கூறுகிறார்.

இதிலே தோய்ந்த ஜேம்ஸ் ஆலன் என்ற ஒரு ஆத்மா நம் ஆத்மா வளர்ச்சி பெறவும், நாம் வளத்துடனும் மகிழ்ச்சியுடனும் வாழும் வழிமுறைகளை அறிந்து கொள்ளவும், சில உண்மைகளை நமக்களித்திருக்கிறது. அந்த ஞான குருவை வாழ்த்துவோம் ; வணங்குவோம்.

"படிப்போம் ; வாழ்வில் கடைப்பிடிப்போம். பயன் பெறுவோம்," என்று அவருக்கு உறுதி கூறுவோம்.

ஆத்ம முன்னேற்றத்திற்கு
கைகூப்பி, உங்களை உள்ளே அழைக்கும்

சகபயணி,

**எம். எஸ். உதயமூர்த்தி**

# ஜேம்ஸ் ஆலனின்

# முன்னுரை

இச்சிறு நூல் — தியானத்தாலும் அநுபவத்தாலும் பெறப்பட்ட இந்நூல்—எண்ணங்களின் வலிமையைப் பற்றிய விரிவான, எல்லாவற்றையும் உள்ளடக்கிய ஒன்றல்ல. எண்ணங்களின் வலிமை என்பது நிறைய எழுதப்பட்ட விஷயம். விளக்கம் தருவதற்குப் பதிலாக, இந்நூல், விஷயங்களைத் தொட்டு, ஒரு கோடி காட்டுகிறது. படிப்பவர்களை சிந்திக்கத் தூண்டுவது தான் இந்நூலின் நோக்கம்.

''அவர்களை உருவாக்குபவர்கள், அவர்கள் தான்''

என்ற உண்மையை — கண்டுபிடிப்பை, - மக்கள் உணர வேண்டும் என்பது தான் இந்நூலின் நோக்கம். எந்த எண்ணங்களைத் தேர்ந்தெடுத்து வளர்க்கிறார்களோ அதற்கேற்ப அவர்கள் உருவாகிறார்கள். குணங்கள் என்ற நமது உள்ளாடையையும், சூழ்நிலை என்ற வெளி ஆடையையும் நெய்யும் நெசவாள நிபுணர் நமது மனம்தான். இத்தனை நாள் அறியாமையாலும் துன்பத்தினாலும் நெய்யப்பட்ட ஆடை, இன்பம் ஞானத்தெளிவு என்ற விஷயங்களால் இனி நெய்யப்பட வேண்டும்.

**ஜேம்ஸ் ஆலன்**

இந்த யுகத்தில் ஒளிபெற்ற பல விஷயங்களில், ஆத்மாவைப் பற்றிய உண்மை இதுதான் ;

மனிதன் தான், அவனது குணங்களை அமைக்கும் சிற்பி, சூழ்நிலையை உருவாக்கும் ஓவியன் ; விதியை நிர்ணயிக்கும் சிருஷ்டிகர்த்தா ; அவனது எண்ணங்களின் தலைவன்.

# எண்ணங்களும் நம் குணங்களும்

''மனிதன் தன் இதயத்தின் ஆழத்தில் எந்த எண்ணத்தைக் கொண்டிருக்கிறானோ அதே போல் ஆவான்'' என்பது முதுமொழி. அது முழு மனித வாழ்வையும் தழுவி நிற்கிறது. அதைவிட, வாழ்வின் எல்லா அம்சங்களையும் தொட்டு, அவன் வாழ்வில் ஏற்படும் ஒவ்வொரு நிலைமைக்கும் ஒவ்வொரு சூழ்நிலைக்கும் காரணமாகிறது. ஒரு மனிதன் அவன் எண்ணு வதைப் போல ஆகிறான் என்பது வார்த்தைக்கு வார்த்தை உண்மை ; அவனது எண்ணங்களின் மொத்த வடிவம்தான் அவனது குணம்.

ஒரு சிறு செடி, விதையில்லாமல் எப்படி துளிர்த்து எழுவதில்லையோ அதுபோல மனித னது ஒவ்வொரு செயலும் அவனது எண்ணம் என்கிற மறைந்து கிடக்கும் விதைகளில்லாமல் கிளம்புவதில்லை. அந்த எண்ண விதைகள் இல்லாமல் செயல் நேர்ந்திருக்க முடியாது.

திடீரென்று— தானாக விளைந்த செயல் என்று சொல்லும் எல்லா செயல்களுக்கும் இது பொருந்தும். திட்டமிடாது நேர்ந்த செயலும்,

நன்கு திட்டமிட்டு செய்யப்பட்ட காரியமும் எண்ண விதைகளிலிருந்து தான் வந்திருக்கின்றன.

செயல் எண்ணங்களின் மலர். இன்பமும் துன்பமும் அதன் கனிகள். ஆகவே, தான் வளர்த்த தோட்டத்திலிருந்து தான், இனிப்பான அல்லது கசப்பான கனிகளை அவன் அறுவடை செய்கிறான்.

''நம் எண்ணங்கள் நம்மை உருவாக்கின.
நம் எண்ணங்கள் செய்த வேலையின்
விளைவு இன்றைய நிலை.
கெட்ட எண்ணங்கள் குடிபுக
கஷ்டம் சேர்கிறது—
மாட்டுக்குப்பின் வண்டி போல.
தூய்மையான எண்ணங்கள் உள்ளேவர
மகிழ்ச்சி தொடர்கிறது—
நிழல் தொடர்வதுபோல.''

சட்ட வரைமுறைக்கு உட்பட்ட வளர்ச்சியின் வடிவம், மானுடம்; ஏதோ தறிகெட்டு தோன்றிய ஒன்றல்ல. காரணமும் காரியமும் சாசுவத உண்மை; மறைந்து கிடக்கிற எண்ண உலகிலும் சரி, நாம் பார்க்கும் பொருள்களால் ஆன அன்றாட உலகிலும் சரி, இது இம்மி கூட மாறாத உண்மை.

பெருந்தன்மை கொண்ட உயர்வாழ்வும், தெய்வீக குணங்களும், ஏதோ அதிர்ஷ்டத்தினால் ஏற்பட்டதல்ல, ஏதோ வாய்ப்பினால் சிலர் பெற்றதல்ல; சரியான எண்ணம் என்ற தொடர் முயற்சியின் விளைவாக ஏற்பட்ட இயல்பான ஒன்று. கடவுள் தன்மை கொண்ட தூய்மையான எண்ணங்களின் தொடர்ந்த உறவுதான் அது.

கீழான, மிருக உணர்வு கொண்ட குண அமைப்பும் அதே முறையில்தான் உருவாகிறது. அலைக்கழிக்கும் கீழ்த்தரமான எண்ணங்களின் தொடர்ந்த தேக்கம்தான் அது.

மனிதன் தன்னைத்தானே உருவாக்கிக் கொள்கிறான்; அல்லது அழித்துக் கொள்கிறான். இது அவனவன் செய்து கொள்ளும் காரியம். எண்ணங்கள் என்ற போர்ப்பட்டறையில் அவன் தன்னையே அழித்துக் கொள்கிற ஆயுதங்களை, உருக்கி வார்க்கிறான். அல்லது அருமையான கருவிகளை உற்பத்தி செய்து அவற்றின் மூலம், வலிமை, அமைதி, சாந்தம் தரும் சொர்க்க பூமியை அவன் அமைத்துக் கொள்கிறான்.

சரியான எண்ணங்களைத் தேர்ந்தெடுத்து சரியானபடி பயன்படுத்துவதன் மூலம், மனிதன் தேவநிலைக்கு உயர்கிறான். தீய எண்ணங்களைப் பயன்படுத்தித் தவறான பாதையில்

செல்வதன் மூலம் விலங்குகளின் நிலைக்குங் கீழே போகிறான். இந்த இரண்டு எல்லைகளின் இடையே பல்வேறு நிலையில் மனித குணங்கள் நிலவுகின்றன. அந்த பல்வேறு நிலைகளை உருவாக்கும் தலைவன், மனிதன் தான்.

மீண்டும் கண்டெடுக்கப்பட்டு, இந்த யுகத்தில் ஒளிபெற்ற பல விஷயங்களில், ஆத்மாவைப்பற்றிய அழகிய உண்மை இதுதான்; மகிழ்வு தரும் விஷயம் இதுதான்; இதைவிட பயன்தரும், மனத்திற்கு தெம்பளிக்கும் தெய்விக வாக்கு,— நம்பிக்கை தரும் உண்மை— வேறு எதுவும் இல்லை. என்ன அது?

> ''மனிதன் தான் அவனது எண்ணங்களின் தலைவன்; அவனது குணங்களை அமைக்கும் சிற்பி; அவனது சூழ்நிலையை உருவாக்கும் ஓவியன்; அவனது விதியை நிர்ணயிக்கும் சிருஷ்டி கர்த்தா.''

சக்தி, அறிவு, அன்பு என்பதன் வடிவமாய் விளங்கும் மனிதன்—தனது எண்ணங்களின் தலைவனாக விளங்கும் மனிதன்—ஒவ்வொரு சூழ்நிலைக்குமான சாவியை தன் கையிலே வைத்திருக்கிறான். அவனை மாற்றக்கூடிய— உயிர்ப்பிக்கக் கூடிய சாதனங்கள் அவனுக்குள்

ளேயே இருக்கின்றன. தான் விரும்பும் வண்ணம் தன்னை அவன் உருவாக்கிக் கொள்ளலாம்.

பலகீனமான, — கைவிட்டுப் போன நிலையில்கூட — மனிதன் தான், அவனது எண்ணங்களின் தலைவன். தாழ்ந்து போன நிலையில் அவன் ஒரு முட்டாள் தனமான தலைவனாக நடந்து கொள்கிறான் ; தன் வீட்டைத் தவறாக நிர்வகிக்கிறான்.

மாறாக, தனது நிலையைப் பற்றித் திரும்பத் திரும்பச் சிந்திக்கத் துவங்கும்போது, தனது வாழ்வு எந்தவித சட்ட வரைமுறைகளினால் இயங்குகிறது என்கிற சூட்சுமத்தைப் புரிந்து கொள்ளும்போது — அவன் புத்திசாலியான தலைவனாய் மாறுகிறான். தனது சக்தியையும், அறிவையும் ஒருமுகப்படுத்தி பலன் தரும் விஷயங்களில் கவனம் செலுத்துகிறான். அவன்தான் 'விஷயம் தெரிந்த' தலைவன்.

எண்ணங்கள் எப்படி இயங்குகின்றன என்கிற வரைமுறைகளைத் தனக்குள்ளே கண்டு பிடித்து தெரிந்து கொள்வதன் மூலம்தான் அவன் சூழ்நிலையின் தலைவனாகிறான்.

இதை எப்படிக் கண்டு பிடிக்க முடியும் ?

அனுபவத்திலிருந்து. சுய சோதனையிலிருந்து. அடிக்கடி எண்ணங்களின் பலன்களைப் புரிந்துகொள்வதிலிருந்து.

விடாது தொடர்ந்து தேடுவதன் மூலமும், சுரங்கத்தில் வெட்டி எடுப்பதன் மூலமும் தான் தங்கமும், வைரமும் கிடைக்கின்றன. அது போல, தன் வாழ்வைப் பற்றிய ஒவ்வொரு உண்மையையும் அவனது ஆத்மா என்னும் சுரங்கத்தில் ஆழமாகத் தோண்டி எடுப்பதன் மூலம் 'தான் தான், தன் வாழ்வின் தலைவன்.' என்பதை உணர்கிறான்.

தனது எண்ணங்களை கவனிப்பதன் மூலம், நெறிப்படுத்துவதன் மூலம், மாற்றிக் கொள்வதன் மூலம் தன் வாழ்விலும் பிறர் வாழ்விலும் என்ன விளைவுகளை அந்த எண்ணங்கள் ஏற்படுத்தி இருக்கின்றன என்று தெரிந்து கொள்வதன்மூலம், தான் எப்படிப்பட்ட சிருஷ்டிகர்த்தா என்ற உண்மையைக் கண்டு கொள்ளலாம்.

**தன்னைப்பற்றிய அறிவுதான்— உண்மையான பேரறிவு; சக்தி; வாழ்வின் பயன்.** அந்த அறிவைப் பெற மனிதன் காரிய காரணத் தொடர்பை சதா ஆராய வேண்டும்; பொறுமையாகச் செய்யவேண்டிய பயிற்சி இது. வாழ்வில் நிகழும் ஒவ்வொரு சம்பவங்களையும், சின்னஞ்சிறு அநுபவங்களையும், அன்றாட

வாழ்வின் நிகழ்ச்சிகளையும் ஆராய்வதன் மூலம் எண்ணங்கள் எப்படி விதிமுறைகளுக்குட்பட்டு செயல்படுகின்றன என்பது தெரியவரும். எந்த துறையிலும் இருப்பதைவிட, இந்த துறையில் எண்ணம் வரைமுறைகளுக்கேற்ப— சில சட்ட திட்டங்களுக்குட்பட்டு நிகழ்கிறது என்பது மிக உன்னதமான உண்மை; மாற்றே இல்லாத உண்மை.

''தேடுபவன் அடைகிறான் தட்டுபவனுக்கு கதவு திறக்கப்படுகிறது'' என்ற உண்மை இதில் பரிபூரணம் பெற்றிருக்கிறது. பொறுமையான பயிற்சியின் மூலமும், இடைவிடாத உள்நோக்கிய ஆராய்ச்சியின் மூலமும் தான் அறிவுக் கோயிலின் கதவைத் திறந்து உள்ளே நுழைய முடியும்.

தேடுங்கள், கிடைக்கும்.
சிந்தியுங்கள், புரிந்து கொள்வீர்கள்.

சூழ்நிலை மனிதனை உருவாக்குவதில்லை. அடிப்படையில் இன்ன மனிதன்தான் உள்ளே இருக்கிறான் என்பதை அவனுக்குக் காட்டிக் கொடுக்கிறது.

# எண்ணங்கள் சூழ்நிலையை மாற்றும் வல்லமை படைத்தவை-I

மனித மனம் ஒரு தோட்டம் போன்றது. தோட்டம்போல அதைக்கருத்துடன் பண்படுத்தி பயிரிடலாம் ; அல்லது 'கண்டது விளையட்டும்' என்றெண்ணி அதன் போக்கில் விட்டு விடலாம். திட்டமிட்டு வளர்த்தாலும் சரி, அல்லது காட்டுப் போக்கில் விட்டாலும் சரி, என்ன விதை அங்கே விழுந்ததோ அதற்கேற்ற பயிர்களை அது உண்டுபண்ணுகிறது. நல்ல பலன்தரும் விதைகளை விதைக்காதபோது உபயோகமற்ற புல்லும் புதரும் தான் அங்கே முளைக்கும் ; பரவும்.

எப்படி, புல்லும், புதரும் முளைக்காமல்—பரவாமல் ஒரு தோட்டக்காரன் தன் தோட்டத்தைக் கவனிக்கிறானோ, — எப்படி நல்ல காய் கனிகளையும் பூக்களையும் பயிரிட்டு வளர்த்து பயன் பெறுகிறானோ, அதே போல ஒரு மனிதன் தன் மனம் என்ற தோட்டத்தில் கறம்பும் காளானும் வளராவண்ணம் கண்ணும் கருத்துமாக காக்க வேண்டும்.

நியாயமில்லாத சிந்தனைகளை எல்லாம் அகற்ற வேண்டும். பயனற்ற எண்ணங்களை எல்லாம் களை எடுத்து எறிய வேண்டும். தன் மனத்தில் நல்லெண்ணம் என்ற நல்ல பூஞ்செடிகளைப் பயிரிட வேண்டும்; தூய்மையான சிந்தனை என்ற கனி தரும் மரங்களை நட வேண்டும்.

தோட்டத்தில் பயிரிட்டு வளர்ப்பது போல மனத்தில் சரியான எண்ணங்களைப் பயிரிட்டு கண்காணித்து வர வேண்டும். அப்படிப்பட்ட மனிதன் ஆத்மாவின் தலைவனாக தன்னை உணர்கிறான்; தன் வாழ்வுத் ,தோட்டத்தின் நிர்வாகி என்பதை உணர்கிறான். எந்த சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு எண்ணங்கள் இயங்குகின்றன என்பதைப் பற்றிய தெளிவு அவனுக்கு ஏற்படுகிறது. எண்ணங்களின் சக்தியும், மன இயல்புகளும் எப்படி அவனது குணங்களை உருவாக்குகிறது, அவனதுசூழ் நிலையை நிர்ணயிக்கிறது, அவனது விதியைத் தீர்மானிக்கிறது என்கிற வரைமுறைகளையும் நுட்பங்களையும் புரிந்து கொள்கிறான்.

எண்ணமும், குணங்களும் ஒன்றேதான். ஒன்றிலிருந்து தான் மற்றது வருகிறது. எண்ணங்கள் தான் குணங்களாக நாளடைவில் மாற்றம் பெறுகின்றன. ஒரு மனிதனது குணங்கள் அவனது சூழ்நிலை மூலமும், அவனுக்கேற்படும் வாய்ப்புக்கள் மூலமும்

தங்களைக் காட்டிக் கொள்கின்றன. அதே போல அவனுக்கு வெளி உலகில் நேரும் வாழ்க்கைச் சம்பவங்களும், அவனது உள் மன நிலையும் ஒரு நேரடித் தொடர்பில்— ஒரு லயம் நிறைந்த உறவில்— இயங்குகின்றன.

ஒரு குறிப்பிட்ட சமயத்தில் ஒரு மனிதனுக் கேற்படும் சம்பவங்களை வைத்து, அவனது கஷ்டங்களைக் கண்டு, அது அவனது மொத்த குணங்களின் விளைவாக ஏற்பட்டது என்று நாம் கூற முடியாது. இருந்தாலும் அவனது எண்ணங்களுக்கும் அவனது சூழ்நிலைக்கும் ஒரு நெருங்கிய தொடர்பு இருக்கிறது; அந்த வாழ்க்கைச் சம்பவங்கள் அவனது வளர்ச்சிக்கு தற்காலிகமாகத் தேவைப்படுகின்றன. இது தான் அதன் அர்த்தம்.

ஒரு இடத்தில் ஒரு மனிதன் ஒரு காரணத் திற்காக வைக்கப்பட்டிருக்கிறான். அதில் ஒரு சட்டம், நியாயம் இயங்குகிறது. அவனது குணங்களை உருவாக்கிய எண்ணங்கள் அவனை அந்த இடத்திற்கு கொண்டு வந்திருக் கின்றன. வாழ்வு என்பது ஒரு திட்டவட்டமான அமைப்பு. அதில் எதுவும் எதிர்பாராது, காரண மில்லாது, நிகழ்ந்து விடுவதில்லை. எல்லாம் ஒரு சட்டத்திற்குட்பட்டு, ஒரு நியதிக்குட்பட்டு இயங்குகிறது.

ஒரு நாளும் இந்த நியதி மாறுவதில்லை.

ஆத்மா எதை ரகசியமாக அவாவுகிறதோ, அதை ஈர்க்கிறது; எதைக் காதலிக்கிறதோ அதைக் கவர்கிறது; எதைக் கண்டு பயப்படுகிறதோ அதை அடைகிறது.

உள் மன நிலைக்கேற்ப வெளி உலக சூழ்நிலை உருவாகிறது.

சூழ்நிலையைக் குறை கூறிக்கொண்டு இருப்பவர்களது வாழ்விலும் சரி, சூழ்நிலையை ஏற்று அத்துடன் இயைந்து வாழ்பவர்களது வாழ்விலும் சரி இந்த உண்மை செயல்படுகிறது. எண்ணங்கள் குணங்களாக மாறி, மனிதனை அந்த இடத்திற்கு அழைத்துச் சென்றிருக்கின்றன என்பதுதான் அந்த உண்மை.

மனிதன், வளர்ச்சியை நோக்கி நடைபோடும் ஜீவன், பரிணாம வளர்ச்சியை நோக்கி இயங்குகிற ஆத்மா.

ஓரிடத்தில் இருக்கும் ஜீவன் அந்த இடத்துக்கு ஏன் வந்தது என்றால், விஷயங்களைத் தெரிந்து கொள்ளவும், வளர்ச்சி பெறவும்தான். ஜீவன் அந்த இடத்திற்கு வந்த காரணம் அதுதான். வாழ்வில் நிகழும் ஒவ்வொரு சம்பவத்திலும் ஒரு படிப்பினை இருக்கிறது. அதை அறிந்து கொள்ளும்போது அவனது ஆத்ம கல்வி நிறைவு பெறுகிறது. உடனே அந்த சம்பவமும் சூழ்நிலையும் மறைகிறது. புதிய சூழ்நிலையும் சம்பவங்களும் உருவாகின்றன. ஆத்மாவின் கல்வி தொடர்கிறது.

வாழ்வில் எதிர்பாராத சம்பவங்கள் ஏற்படும்போது தன்னை மீறிய சக்திகளின் கைதி என்று மனிதன் தன்னை நினைக்கிறான். அப்படி எண்ணும்போது அந்த சூழ்நிலைகளே அவனை நாலாபுறமும் நெருக்குகின்றன. தான் ஒரு

ஆக்க சக்தி படைத்த ஜீவன் என்பதை அவன் உணர வேண்டும். அப்போது கீழே கிடக்கும் மணலைக் கூட தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர முடியும்.

தன் எண்ண விதைகளைக் கொண்டு தனது சூழ்நிலையைக் கட்டுப்படுத்தலாம் என்பதை உணரும்போது மனிதன் தன்னையே உரு வாக்கிக் கொள்கிறான்; ஒரு உயர் தலைவ னாக மலர்கிறான்.

சுய கட்டுப்பாட்டை வளர்த்துக் கொண்ட வர்கள், தன்னைத் தானே தூய்மைப்படுத்திக் கொள்ளும் பக்குவத்தை வளர்த்துக் கொண்ட வர்கள், சூழ்நிலை என்பது எண்ணங்களிலிருந்து உருவாகிறது என்பதை அறிவார்கள். எண்ணங் களை எந்த அளவுக்கு மாற்றிக் கொள் கிறோமோ, அந்த அளவுக்கு சூழ்நிலையில் மாற்றம் ஏற்படும். இந்த மகத்தான உண்மையை உணர்ந்து, முழு ஈடுபாட்டுடன் தன் குறைபாடுகளை அகற்றும் போது, நல்ல வேகமான முன்னேற்றத்தை வாழ்வில் காண முடியும். எல்லா சங்கடங்களையும் இடர் களையும், எளிதில் கடக்க முடியும்.

ஆத்மா எதை ரகசியமாக அவாவு கிறதோ அதைத்தான் அது ஈர்க்கிறது; எதைக் காதலிக்கிறதோ அதைக் கவர்கிறது. எதைக் கண்டு பயப்படுகிறதோ அதை அடைகிறது.

தன்னுடைய லட்சியங்களின் உயர்விற்கேற்ப ஆத்மா உயர்கிறது. அல்லது தனது கீழ்த்தரமான எண்ணங்களுக்கேற்ப அது குப்புற விழுகிறது. சூழ்நிலை மூலம் ஆத்மா தன்னையே அடைகிறது; தான் விரும்புவதைச் சூழ்நிலையாகப் பெறுகிறது.

மனத்தில் விழுந்த எண்ண விதை அங்கே முளைவிட்டு தன் இனத்தைப் பெருக்குகிறது. உடனடியாகவோ, நாள்பட்டோ எண்ணம் செயலாக மலர்கிறது. அந்த செயல் சந்தர்ப்பமாக, சூழ்நிலையாக கனிகிறது. நல்லெண்ணம் நல்ல கனிகளைத் தருகிறது. தீய எண்ணம் நச்சுக் கனிகளை உண்டாக்குகிறது.

உள் மனநிலைக்கேற்ப வெளி உலக சூழ்நிலை உருவாகிறது. மகிழ்ச்சியான சூழ்நிலையும் சரி, மகிழ்ச்சியற்ற சூழ்நிலையும் சரி, மனிதனுக்கு அனுபவம் தந்து, அவனை முன்னேற்ற உதவும் சாதனங்கள் தான். எதை விதைக்கிறோமோ அதை அறுவடை செய்வதைப் போல, மனிதன் இன்ப துன்பங்களிலிருந்தும் சங்கடங்களிலிருந்தும் பாடங்களை அறுவடை செய்கிறான்; கற்றுக்கொள்கிறான்.

எந்த ஆசைகளும் லட்சியங்களும் உள்ளத்தை ஆக்கிரமித்துக் கொண்டனவோ அவற்றின் முடிவிடத்திற்கு அவன் வந்து சேரு

பிச்சைக்கார விடுதிக்கோ அல்லது சிறைக்கோ ஒரு மனிதன் விதியின் கொடுமைகளினால் வந்து சேர்வதில்லை; அவனது கீழ்த்தரமான ஆசைகளாலும், எண்ணங்களாலுமே வந்து சேருகிறான்.

கிறான். தன் எண்ணங்கள் விளைவித்த கனி களை, சூழ்நிலையாக — அவன் அறுவடை செய்கிறான். கானல் நீரைப் பற்றி கனவு கண்டாலும் சரி, அல்லது உறுதியான உயர் லட்சியம் என்ற நெடும் பயணத்தை மேற் கொண்டாலும் சரி, எண்ணங்களுக்கேற்ப விளைவுகளைச் சந்திக்கிறான். வளர்ச்சியும் உலகை அனுசரித்து வாழும் வாழ்வும் சில சட்ட திட்டங்களுக்கேற்ப இயங்குகின்றன. அவற்றின் பலன்களை மனிதன் அநுபவிக்கிறான்.

பிச்சைக்கார விடுதிக்கோ அல்லது சிறைக்கோ, ஒரு மனிதன் விதியின் கொடுமை களினால் வந்து சேர்வதில்லை ; அவனது கீழ்த் தரமான ஆசைகளினாலும், அலைக் கழிக்கும் எண்ணங்களாலுமே அங்கே வந்து சேருகிறான். தூய்மையானவன் வெளி உலக சக்திகளின் நெருக்கடியினால் திடீரென்று ஒரு குற்றத்தைச் செய்து விடுவ தில்லை. குற்றம் புரியும் எண்ணம் நெடுநாட் களாக அவன் இதயத்திலே வளர்க்கப்பட்டிருக் கிறது. அந்த எண்ணம் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து வலிமை பெறுகிறது. ஒரு சந்தர்ப்பம் வந்ததும் அவனைக் காட்டிக் கொடுக்கிறது. அவ்வளவுதான்.

சூழ்நிலை மனிதனை உருவாக்குவதில்லை. அது அவனையே அவனுக்குக் காட்டிக் கொடுக் கிறது. அடிப்படையில் இன்ன மனிதன்தான்

உள்ளே இருக்கிறான் என்பதை அவனுக்கே அது தெளிய வைக்கிறது. கெட்ட எண்ணங்களால் தூண்டப்படாமல் ஒரு மனிதன் குற்றம் புரிவதில்லை. சங்கடங்களை அநுபவிப்பதில்லை. சூழ்நிலை காரணமல்ல. அதே போல ஒரு மனிதன் உயர் நெறிகளுடன், மகிழ்வுடன் வாழ்வதற்கும் அவன் தன் மனத்தில் பயிரிட்டு வளர்த்து வந்த உயர் எண்ணங்களும், லட்சியங்களும்தான் காரணம்.

மனிதன்தான், தனது எண்ணங்களின் சொந்தக்காரன்; தன் எண்ணங்களின் தலைவன், தனது எண்ணங்களால் தன்னை உருவாக்கிக் கொள்கிறான்; ''தன் வாழ்க்கைச் சூழ்நிலை எப்படி இருக்க வேண்டும்?'' என்று தன் எதிர்கால வாழ்வை தனது எண்ணங்களால் எழுதி உருவாக்கும் நாவலாசிரியன் அவன்.

பிறவி எடுக்கும் போதே ஆத்மா தன் சொந்த இடத்திற்கு— தனது சொந்த குணங்களின் நிலைக்கு வந்து விடுகிறது. வாழ்க்கை எனும் புனிதப் பயணத்தில் அது எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியிலும் தன் குணங்களுக்கேற்ற சூழ்நிலையை அது ஈர்க்கிறது. ஆத்மாவின் தூய்மைக்கும் அல்லது தூய்மையற்ற நிலைக்குமேற்ப —வலிமைக்கும், பலகீனத்திற்குமேற்ப— சம்பவங்களையும் சூழ்நிலைகளையும் நாடுகிறது.

தான் ஆசைப்படுபவைகளை மனிதன், கவர்வதில்லை. அடிப்படையில் அவன் என்னவாக இருக்கிறானோ அந்தக் குணங்களுக்கேற்பவற்றை அவன் கவர்கிறான். அவனது திடீர் ஆசைகளும், சுய நலம் நிறைந்த விருப்பங்களும், கற்பனைகளும் அதற்கேற்ற உணவைப் பெற்று வளர்கின்றன. ஆழ் மன எண்ணங்களுக்கேற்ப வாழ்வின் ஒவ்வொரு படியிலும், தடை அல்லது சங்கடங்கள் நேர்கின்றன.

நம்மை உருவாக்கும் தெய்வீகம், நம்முள் தான் இருக்கிறது; அது நாமே தான். தன் எண்ணங்களாலேயே மனிதன் சின்னாபின்னப் படுத்தப் படுகிறான்; அலைக்கழிக்கப்படுகிறான். எண்ணமும் செயலும் தான், விதி என்ற சிறையின் காவலர்கள். கீழானவையாக அவை இருக்கும்போது நம்மை சிறைப்படுத்துகின்றன; உயர்வாக அமையும்போது அவை நம்மை சுதந்தர தேவதைகளாக்கி சிறகடிக்கச் செய்கின்றன:

எதை மனிதன் விரும்புகிறானோ, எதைக் குறித்து பிரார்த்திக்கிறானோ அதை அவன் அடைவதில்லை. எவற்றை இத்தனை நாள் சம்பாதித்து வைத்திருந்தானோ, எந்த குணங்களின் மொத்த உருவமாகத் தன்னை வளர்த்து வைத்திருந்தானோ அவற்றின் பலனை அடைகிறான். ஆசைகளும், பிரார்த்தனைகளும்,

தங்கள் சூழ்நிலையை மேம்படுத்திக் கொள்ள வேண்டும் என்று மனிதர்கள் பதட்டப்படுகிறார்கள். ஆனால் தங்களை மேம்படுத்திக்கொள்ள முனைவதில்லை. எனவே சூழநிலையின் கைதிகளாக அவர்கள் வாழ்கின்றனர்.

அன்றாட வாழ்வில் கொண்டிருக்கும் எண்ணங்களுடனும் செயல்களுடனும் ஒன்றி இருக்க வேண்டும். அப்போதுதான் அந்தப் பிரார்த்தனைகள் நிறைவேறும். வெறும் பிரார்த்தனைகளும் ஆசைகளும் எதையும் செய்வதில்லை.

தானிருக்கிற சூழ்நிலையைக் கண்டு, வருந்தி, புலம்பி, போராடிக் கொண்டிருப்பவர்களை, நாம் அதிகம் சந்திக்கிறோம். அத்தகைய மனிதன் தன் வாழ்வில் ஏற்பட்ட விளைவை எதிர்த்து தொடர்ந்து போராடுகிறான். 'அந்த விளைவின் காரணத்தை தன் இதயத்தில் பாதுகாத்து வந்திருக்கிறான்,' என்ற அடிப்படை உண்மையை மனிதன் மறந்து விடுகிறான்.

ஒரு விளைவு நேர்கிறது என்றால் அதன் காரணம் என்ன ? தெரிந்து செய்த குற்றமாய் இருக்கலாம் ; அல்லது அவன் அறியாது, அவனுக்குள் இருக்கும் பலகீனம் காரணமாக இருக்கலாம். எதுவாக இருந்தாலும் சரி, அது அவனது முன்னேற்றத்தைத் தடுக்கிறது. அவனைப் பக்குவப்படுத்துவதற்காக சூழ்நிலையின் பலத்த குரலாக அது ஒலித்துக் கொண்டிருக்கிறது. இதை நாம் உணரவேண்டும்.

'தங்களது சூழ்நிலையை மேம்படுத்திக் கொள்ள வேண்டும்' என்று மனிதர்கள் பதற்றப்

படுகிறார்கள். ஆனால் தங்களை—தங்கள் எண்ணங்களை—மேம்படுத்திக் கொள்ள அவர்கள் முனைவதில்லை; அக்கறை செலுத்துவதில்லை. ஆதலால் சூழ்நிலையின் கைதிகளாக அவர்கள் வாழ்கின்றனர்.

குற்றங்குறைகளைத் திருத்திக் கொள்ளத் தயங்காதவர்கள் மட்டுமே, தங்களது ஆழமான ஆசைகளையும் லட்சியங்களையும் அடைகின்றனர். தெய்வீக விஷயங்களுக்கும் சரி, நடைமுறை உலகிற்கும் சரி, இது பொருந்தும். செல்வம் சேர்ப்பது என்பதில் மட்டுமே குறியாயிருப்பவன் பல தியாகங்களையும் செய்யத் தயாராயிருக்க வேண்டும். இதற்கே இவ்வளவு தியாகம் செய்ய வேண்டுமென்றால், வலிமையும் சக்தியும் நிறைந்த தெய்வீக வாழ்வைப் பெற மனிதன் எவ்வளவு தியாகங்களைச் செய்ய வேண்டும்! எண்ணிப்பாருங்கள்.

இதோ ஒரு மனிதன்.

வறுமைக் கொடுமையின் பிடியிலகப்பட்டவன். தனது வாழ்க்கை வசதிகள் பெருகவேண்டுமென விரும்புகிறான்; தன் வறுமைச் சூழ்நிலை மாற வேண்டுமென ஆசைப்படுகிறான். ஆனால் அதற்காக தான் செய்யவேண்டிய வேலையை—அதற்கீடான உழைப்பைக் கொடுக்க அவன் தயாரில்லை; சண்டித்தனம் செய்கிறான். ''எஜமானன் சம்பளம் குறைத்துக் கொடுக்

கிறான் !'' என்று குறை சொல்லி எஜமானனை ஏமாற்றுகிறான். 'வளமோடு வாழ்வது எப்படி?' என்ற உண்மையின் அடிப்படையை உணராதவன் அவன்; வறுமையின் பிடியிலிருந்து மீள தகுதியற்றவன். உண்மையிலேயே இன்னும் அதிகமான வறுமையை ஈர்க்கிறான்— தனது சோம்பேறித்தனத்தினால், ஏமாற்றும் வாழ்க்கை நெறியால், ஆண்மைக்கு புறம்பான எண்ணங்களால், தனது மனோபாவத்தினால்.

இதோ ஒரு பணக்காரன்.

அவனது மித மிஞ்சிய சாப்பாட்டின் விளைவாக, தொடர்ந்த நோய்க்கும் வயிற்று வலிக்கும் ஆளாகியவன். நோய் நீங்க எத்தனை பணத்தையும் கொடுக்கத் தயாராயிருக்கிறான். ஆனால் தனது மிதமிஞ்சிய சாப்பாட்டுப் பழக்கத்தை மாற்றிக் கொள்ளத் தயாரில்லை. நாக்கு ருசிக்கும், ஆசைக்கும் அடிமைப்பட்டு, தன் உடலுக்கு ஊறு விளைவிக்கின்ற மனிதன், உடல் ஆரோக்கியத்தைப்பற்றி ஆசைப்படுவது என்ன நியாயம்? ஆரோக்கிய வாழ்வின் ஆரம்ப பாடத்தைக் கூட இன்னும் அவன் கற்றுக் கொள்ளவில்லை.

இதோ ஒரு முதலாளி.

உழைப்பவனுக்கு உரிய நியாயமான கூலியைக் கொடுக்காமலிருக்கக் குயுக்தியான வழிகளைக் கண்டுபிடிப்பவன். கூலியைக் குறைத்து கொடுத்து, லாபத்தைப் பெருக்கிக் கொள்ள

விரும்புபவன். அப்படிப்பட்ட மனிதன் வளமான வாழ்வு பெற சிறிதும் அருகதை அற்றவன். தன் புகழுக்கும் செல்வத்திற்கும் கேடு வரும் போது சூழ்நிலையைக் குற்றஞ் சாட்டுகிறான். ''நான் தான் என் நிலைக்குக் காரணம்'' என்ற நினைவு கிஞ்சித்தும் இல்லாதவன் அவன்.

''அவனவனது சூழ்நிலைக்கு அவனவன் தான் காரணம்,'' என்ற உண்மையை விளக்க மூன்று உதாரணங்களையும் காட்டினேன். ''தான் செய்யும் காரியங்கள் தான் தனது சூழ்நிலையைப் பாதிக்கின்றன'' என்கிற நினைவே இல்லாமல் மனிதன் செயல்படுவதைக் கவனியுங்கள்.

ஒவ்வொரு மனிதனும் ஒரு நல்ல விளைவை நோக்கித்தான் பாடுபடுகிறான். ஆனால் அந்த விளைவுகளை எல்லாம் சின்னாபின்ன மாக்கும் சிந்தனைகளையும், செயல்களையும் அவனே ஊக்குவிக்கிறான். இதனால், தான் விரும்பும் முடிவுகளை அவனால் அடைய முடிவ தில்லை; ஒரு சரியான பாதையில் அவனால் செல்ல முடிவதில்லை.

இத்தகைய வெவ்வேறு உதாரணங்களை நாம் நிறைய காட்டமுடியும். ஆனால் இது தேவை இல்லை.

வாழ்வில் நிகழும் ஒவ்வொரு சம்பவங்களின், அநுபவங்களின் காரண காரியத் தொடர்பை ஆராய வேண்டும்.

தனது வாழ்வு எவ்வித சட்ட வரை முறைகளினால் இயங்குகிறது என்கிற சூட்சுமத்தைப் புரிந்துகொள்ளும்போது மனிதன் புத்திசாலியான தலைவனாய் மாறுகிறான்.

# எண்ணங்களும் சூழ்நிலையும்–II

நாம் எண்ணும் எண்ணங்கள் எப்படி நம் வாழ்வைப் பாதிக்கின்றன என்று ஆராய்ந்தால் அதில் ஒரு எண்ண விதிமுறை இருப்பதைப் புரிந்துகொள்ளலாம். இந்த விதிமுறைகளைக் கண்டுபிடிக்கும்வரை வாழ்வில் நடக்கும் சம்பவங் களின் அடிப்படைகள், தர்க்கவாத அறிவுக்கு கட்டுப்பட்டு வராது; அவற்றின் நியாயம் விளங்காது.

வாழ்வின் சூழ்நிலைகளிலே எவ்வளவோ சிக்கல்கள். எண்ணங்கள் மனித மனத்தில் எவ்வ ளவோ ஆழமாக வேர்விட்டுப் போயிருக்கின்றன. மகிழ்ச்சி நிலை மனிதருக்கு மனிதர் வேறுபடு கிறது. எனவே ஒரு மனிதனுடைய வெளி வாழ்க்கை நிகழ்ச்சிகளை வைத்து அவனது ஆத்ம வளர்ச்சியைப்பற்றி நாம் தீர்ப்பு வழங்க முடி யாது. அவனது ஆத்ம வளர்ச்சி அவனுக்கு மட்டுமே தெரிந்திருக்கும்.

சில விஷயங்களில், ஒரு மனிதன் நாணய மானவனாக, நியாயவானாக இருக்கக்கூடும். இருந்தும் அவன் துன்பங்களை அநுபவிக்கக் கூடும். மாறாக, ஒரு மனிதன் நியாயமற்ற வனாக சில விஷயங்களில் இருக்கக்கூடும்;

இருந்தும் ஏராளமான செல்வத்தைச் சேர்க்கக் கூடும்.

சகஜமாக என்ன முடிவுக்கு நாம் வரு கிறோம் ?

''பாருங்கள், இவன் எவ்வளவு நியாயமான வனாக இருந்தான். எப்படித் தோற்றுப் போனான் பாவம்'' என்று கூறுகிறோம். ''நாணயமில்லாத இந்த மனிதன் எப்படி பணக்காரனாயிருக்கிறான்!'' என்று மேலோட்ட மாக தீர்ப்பு கூறுகிறோம்.

இதன் மூலம் அநியாயக்காரன் முழுக்க முழுக்க ஊழலையும் அநியாயங்களையும் செய்த வன் என்றும் நியாயமான மனிதன் நூறு சதம் அப்பழுக்கற்ற வாழ்வை வாழ்ந்தவன் என்றும் நாமாக எண்ணிக் கொள்கிறோம்.

''இப்படிப்பட்ட தீர்ப்பு உண்மையானதல்ல. தவறானது,'' என்று நமது தீர்க்கமான அறிவும் பரந்த அநுபவமும் தெரிவிக்கின்றன. நியாய வானிடம் இல்லாத சில உயர் குணங்கள் அநியா யக்காரனிடம் இருக்கக்கூடும். நியாயவானிடம் சகிக்க முடியாத சில குறைகள் இருக்கக்கூடும்.

நியாயமாய் நடந்து கொள்பவன் தனது நல்லெண்ணங்களின் பலனைத்தான் அறுவடை செய்கிறான் ; அல்லது அவனது குறைகள் கொண்டு தரும் சங்கடங்களை அநுபவிக்கிறான்.

கெட்ட மனிதனும் அதைப்போலவே இன்ப துன்பங்களை அநுபவிக்கிறான்.

''ஒரு நல்ல மனிதன் தனது நல்ல குணங்களுக்காக கஷ்டம் அநுபவிக்கிறான்,'' என்று எண்ணுவது மனிதனுடைய தற்பெருமைக்கு மகிழ்ச்சி தரலாம்.

தன்னிடமுள்ள எல்லாவிதமான நோய் பிடித்த எண்ணங்களையுப், தூய்மையற்ற சிந்தனைகளையும், கசப்பான நினைவுகளையும் தன் மனத்திலிருந்து விரட்டி, பாவக்கறைகளை சுத்தமாக கழுவியபின் மட்டுமே ''நான் நன்மை செய்து நல்லவனாயிருப்பவன். எனக்கு துன்பங்களும் சங்கடங்களும் மட்டுமே வருகின்றன பாருங்கள்!'' என்று சொன்னால் அர்த்தமுண்டு.

பூரணத்துவத்தை நோக்கிச் செல்லும்போது ''வாழ்வில், ஒரு சட்டம், ஒரு நியாயம், ஒரு விதிமுறை இயங்குகிறது; நன்மைக்கு தீமையையும், தீமை செய்யும்போது நன்மையையும் அது கொடுப்பதில்லை,'' என்பதை மனிதன் உணர்கிறான்.

அத்தகைய ஞானத்தைப் பெறும்போது தன்னுடைய அறியாமையையும் கண் மூடித்தனத்தையும் அவனால் புரிந்து கொள்ள முடிகிறது. வாழ்வு எத்தகைய சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு இயங்குகிறது என்பது புரிகிறது.

வாழ்வில் ஏற்பட்ட நல்ல அநுபவங்களும், கெட்ட சம்பவங்களும், வளர்ச்சி பெறும் ஆத்மா வுக்கு— வளர்ச்சி பெற வேண்டி— நேர்ந்த நியாயமான சந்தர்ப்பங்கள் தான் என்பதை மனிதன் உணர்ந்து கொள்ளவேண்டும்.

நல்ல எண்ணங்களும், செயல்களும் கெட்ட விளைவுகளை ஏற்படுத்துவதில்லை; கெட்ட எண்ணங்களும், செயல்களும் ஒரு நாளும நல்ல பலன்களைத் தருவதில்லை. சோளத்தைப் போட் டால் சோளம் தான் விளையும், முள் செடியை விதைத்தால் முள் செடி தான் பயிராகும், என் பதைப் போலத்தான் இதுவும். நிஜ உலகில் இதை உணர்ந்து கொண்டு அதற்கேற்ப வாழும் மனிதன், மன உலகமும், வெளி உலகமும் அதே போலத்தான் ஒரு நியாயத்திற்கு கட்டுப்பட்டு செயல்படுகிறது என்பதைப் புரிந்து கொள்வ தில்லை.

இந்த நியாயம் இம்மிகூடப் பிசகாமல் நடக் கிறது என்பது தெரிந்தும் மனிதன் அதைப் புரிந்து கொள்வதில்லை. அதற்கு ஒத்த வண்ணம் தன் வாழ்வை நடத்துவதில்லை.

துன்பங்களை அநுபவிக்கிறோம் என்றால், ஏதாவது ஒரு திசையில் தீய எண்ணங்களை செலுத்தியதன் விளைவுதான் அது; எப்போதுமே அது இப்படித்தான். தன் வாழ்வை இயக்கும் விதிமுறைகளுடன் ஒத்து இயங்காததன் விளைவைத்தான் அது குறிக்கிறது. பய

ஊற்றவைகளையும், அழுக்குகளையும் எரித்து தூய்மைப்படுத்தும் காரியம் தான், துன்பங்களை அநுபவிப்பதன் நோக்கம். மனிதன் தூய்மை நிலையை அடையும்போது துன்பம் நின்று விடுகிறது- அழுக்கெல்லாம் எரிந்து தங்கம் சுத்தமாய் விடுவது போல. பூரணத்துவம் பெற்ற மனிதன், தூய்மையான மனிதன், ஞானநிலை அடைந்த மனிதன், துன்பங்களை அநுபவிப்பதில்லை.

உள்மன எண்ணங்களும், வெளிஉலக வாழ்வும் ஒருமைப்பாடில்லாமல், ஒன்றி இயங்காததன் விளைவுதான் துன்பச் சூழ்நிலை. அதே போல, எல்லா வசதிகளையும் பெற்று ஒரு மனிதன் அநுபவிக்கும் சுமுகமான வாழ்க்கைச் சூழ்நிலை, அவனது எண்ணங்களும் வெளி உலக வாழ்வும் ஒரு ஒத்த நிலையில் இயங்குவதன் விளைவு தான். ஆண்டவனது அனுக்கிரகம் பெற்ற நிலை என்பது, நிறைய செல்வத்தை— பொருளைப் பெற்ற நிலை அல்ல. நேர்மையான எண்ணங்களின் அளவுகோல் அது. துன்பமும், மன உளைச்சலும், பொருளின்மையால், வறுமையால், ஏற்படும் நிலை அல்ல; தவறான எண்ணங்களின் அளவுகோல் அது.

ஒரு மனிதன் சபிக்கப்பட்டவனாகவும் அதே சமயம் பணக்காரனாகவும் இருக்கலாம். அல்லது வாழ்த்தப்பட்டவனாகவும் அதே சமயம் வறுமையில் வாழ்பவனாகவும் இருக்கலாம். ஒரு மனிதன் தனது செல்வத்தைச் சரியானபடி

புத்திசாலித்தனமாக உபயோகிக்கும் போதுதான் ஆண்டவன் அருளால் விளையும் உயர் வாழ்வும் செல்வமும் வந்து சேரும். நியாயமில்லாமல் தன் மீது சுமத்தப்பட்ட சுமையாக ஒரு ஏழை தன் வாழ்வைக் கருதும் போது, துன்பமும் மன உளைச்சலுமே மிஞ்சுகிறது.

இழிநிலை வாழ்வின் இரண்டு கோடிகள் தான் — வறுமையும், (தவறான வழியில் நம்மைத் தூண்டும்) தாழ்ந்த எண்ணங் களும். இரண்டும் இயற்கைக்கு விரோத மானவை; அவை குழப்பமரன, கட்டுப்பாடற்ற மனத்தின் விளைவுகள்.

மகிழ்வுடனும், ஆரோக்கியத்துடனும், வள மான செல்வத்துடனும் மனிதன் வாழவில்லை என்றால், அவன் மனம் சரியான பாதையில் பண்படுத்தப்படவில்லை என்பது தான் பொருள். வெளி உலக வாழ்க்கைச் சம்பவங்களும் உள் மனமும் எவ்வாறு ஒத்து இயங்குகிறது என்பதன் விளைவு தான் இன்பம், நோயற்ற வாழ்வு, செல்வம் எல்லாம்.

ஊளையிட்டு தன்னைத்தானே நொந்து கொள்வதை என்று மனிதன் நிறுத்துகிறானோ, வாழ்வை இயக்குகின்ற, மறைந்து கிடக்கும் நியாயங்களை என்று புரிந்து கொள்ளத் துவங்கு கிறானோ—அன்றுதான் உண்மையில் மனிதன், மனிதனாகிறான். அப்போது தான் ''தனது

நிலைக்கு பிறர்தான் காரணம்'' என்று குற்றஞ் சாட்டுவதை நிறுத்துகிறான்; உயர்ந்த, வலிவான எண்ணங்களால் தன்னை உருவாக்கிக் கொள்கிறான் ; சூழ்நிலையைக் குற்றஞ்சாட்டி திட்டி உதைப்பதை நிறுத்துகிறான். மாறாக அவற்றை எல்லாம், தனது வேகமான முன்னேற்றத்திற்கான சாதனங்களாகப் பயன் படுத்துகிறான். தன்னுள் மறைந்து கிடக்கும் சக்திகளை உணர்ந்து கொள்கிறான். சாதனை நிகழ்த்தும் திறமைகள் தன்னுள் ஒடுங்கிக் கிடக்கிறது என்பதைக் கண்டு பிடிக்கிறான்.

இப்பிரபஞ்சம் இயங்குவது சில விதி முறைகளினால் தான்—ஏனோ தானோ என்றல்ல. வாழ்வின் அடிப் படை நீதிதான்—அநீதி அல்ல. ஆத்மீக உலகை ஆளும் சக்தி நேர்மைதான்—ஊழலல்ல.

## எண்ணம்–குணநலன்–சூழ்நிலை–III

இப்பிரபஞ்சம் இயங்குவது சில விதிமுறைகளினால் தான்; ஏனோ தானோ என்றல்ல. வாழ்க்கைத் தத்துவத்தின் அடிப்படை நீதி தான்; அநீதி அல்ல. ஆத்மீக உலகை ஆளும் சக்தி—உருவாக்கும் சக்தி—நியாயமும் நேர்மையும் தான்; ஊழலல்ல். இதுதான் உண்மை.

இப்பிரபஞ்சம் சில நியாயங்களுக்கு கட்டுப்பட்டு இயங்குகிறது என்பதைப் புரிந்து கொண்டு, மனிதன், முதலில் தன்னைச் சரி செய்து கொள்ள வேண்டும். பிறரைப் பற்றியும் மற்ற பொருட்களைப் பற்றியும், தன் எண்ணங்களை மாற்றிக் கொள்ளத் துவங்கும்போது, பிறரும் மற்ற பொருட்களும் அவன்பால் கொண்டிருந்த எண்ணங்களை மாற்றிக் கொண்டு, மாறி வருவதை அவன் உணர முடியும்.

இவ்வுண்மையை ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்வில் சோதித்துப் பார்க்க முடியும். நம்மைப் பற்றி நாமே ஆழ்ந்து சிந்தித்து சுய சோதனை செய்து கொள்வதன் மூலம் இந்த உண்மையைக் கண்டு பிடிக்கலாம்.

முதலில், மனிதன் தன் எண்ணங்களை மாற்றிக் கொள்ளட்டும். தன்னைச் சுற்றியுள்ள சூழ்நிலையில் எவ்வளவு வேகமாக மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன என்கிற ஆச்சரியமான விஷயத்தை அவன் தெரிந்து கொள்வான்.

எண்ணங்களை ரகசியமாக வைத்துக் கொள்ளலாம் என்று மனிதர்கள் நினைக்கிறார்கள்; கற்பனை செய்து கொள்கிறார்கள். அது அப்படி நடப்பதில்லை. எண்ணத்தை யாரும் மறைக்க முடியாது. ஏனெனில் எண்ணம் முதலில் பழக்கமாக மாறுகிறது. பின், பழக்கம் சூழ்நிலையாக உருவாகிறது.

● தாழ்ந்த எண்ணங்கள்—இச்சைகளாகவும், காம உணர்வுகளாகவும், குடிபோதை போன்ற பழக்கங்களாகவும் மாறுகின்றன; பின் அந்தப் பழக்கங்கள் அழிவு, நோய் என்ற சூழ்நிலைகளாக மாறுகின்றன.

● தூய்மையற்ற ஒவ்வொரு எண்ணமும், குழப்பம், தளர்ச்சி என்ற பழக்கங்களாக மாறுகின்றன. பின் திசை திரும்பிய சூழ்நிலையாக மாறி நேர் எதிர் விளைவுகளை ஏற்படுத்துகின்றன.

● பயம், சந்தேகம், முடிவெடுப்பதில் தயக்கம் என்ற எண்ணங்கள், பலகீனமான, ஆண்மையற்ற, உறுதி குலைந்த பழக்கங்களை உண்டாக்குகின்றன. பின் அதுவே தோல்வி.

வறுமை, அடிமையாக பிறரைச் சார்ந்திருத்தல் என்ற சூழ்நிலைக்கு கொண்டு செல்கிறது.

● சோம்பேறித்தனமான எண்ணங்கள், அசுத்தமான பழக்க வழக்கங்களையும் நாணய மற்ற குணங்களையும் உண்டு பண்ணுகின்றன. பின் அதுவே பிச்சை எடுக்கும் நிலையையும் எதிலும் தோற்றுப் போகின்ற சூழ்நிலையையும் உருவாக்குகிறது.

● பிறரைப் பழிக்கும் எண்ணங்களும் வெறுப்பும், பிறரைக் குறை சொல்லும் பழக்கத்தை உண்டாக்குகிறது; வன்முறையில் ஈடுபடும் குணத்தை உருவாக்குகிறது. மேற் கூறிய இரண்டு பழக்கங்களும், நமக்கு ஊறு விளைவிக்கிற- காயப்படுத்துகிற- சூழ்நிலையை யும், நாம் அபாண்டமாகத் தண்டிக்கப்படுகின்ற சூழ்நிலையையும் உருவாக்குகிறது.

● சுயநலமிக்க எண்ணங்கள், தன்னை முன் நிறுத்துகின்ற பழக்கத்தையும், சுயலாபம் தேடும் குணத்தையும் ஏற்படுத்துகிறது. பின்னால் அதுவே சங்கடம் நிறைந்த சூழ்நிலையை, துயரம் நிறைந்த சூழ்நிலையை — உருவாக்கு கிறது.

இதற்கு மாறாக :

○. அழகான எண்ணங்கள் அன்பு, கருணை என்ற பழக்கங்களாக மாறுகின்றன. பின்னால்

அது சுமுகமான சூழ்நிலையையும், புத்துணர்ச்சியூட்டும் சூழ்நிலையையும் உருவாக்குகிறது.

○ தூய்மை மிக்க எண்ணங்கள் சுயகட்டுப்பாடு, அடக்கம் என்ற பழக்கங்களை ஏற்படுத்துகின்றன. பின் அதுவே அமைதியும் சாந்தமும் நிறைந்த சூழ்நிலையை உண்டாக்குகிறது.

○ தன் காலிலே நிற்க விரும்பும் எண்ணம், துணிவு, முடிவெடுக்கும் உறுதி, போன்ற எண்ணங்கள் ஆண்மை நிறைந்த பழக்க வழக்கங்களை உண்டு பண்ணுகிறது. பின்னால், வளமான வாழ்வு, வெற்றி, சுதந்திரம் என்ற சூழ்நிலைகளை அமைக்கிறது.

○ துடிப்பு நிறைந்த எண்ணங்கள், தூய்மையான பழக்கங்களையும், உழைக்கும் மனோபாவத்தையும் உண்டு பண்ணுகின்றன. பின் [illegible] இனிமையான சூழ்நிலையாக மாறுகிறது.

○ சாந்தமான எண்ணங்கள், மன்னிக்கும் எண்ணங்கள் அமைதியான பழக்கவழக்கங்களை ஏற்படுத்துகின்றன ; பின்னால் அதுவே ஒரு பாதுகாப்புத் தரும் சூழ்நிலையை உண்டாக்குகிறது.

○ அன்பான எண்ணங்கள், சுயநலமற்ற எண்ணங்கள், மற்றவருக்காகத் தன்னைத் தியாகம் செய்யும் குணத்தை—பழக்கத்தை உண்டாக்குகின்றன. இதன் விளைவாக நிரந்தரமான வளம்

நிறைந்த வாழ்வும், உண்மையான செல்வமும் ஏற்படுகிறது.

நல்லதோ, கெட்டதோ, ஒரு குறிப்பிட்ட எண்ணம் தொடர்ந்த சங்கிலி போல் நீடிக்கும் போது, அது அவனது குண நலன்களைப் பாதிக்காமல், சூழ்நிலையைப் பாதிக்காமல், ஒரு விளைவை ஏற்படுத்தாமல் விடுவதில்லை.

ஒரு மனிதன் தான் விரும்பும் சூழ்நிலையைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியாது என்பது உண்மை தான். ஆனால் தன் மனத்தில் உலவவிடும் எண்ணங்களைத் தேர்ந்தெடுக்கலாம். இதன்மூலம், மறைமுகமாக தான் விரும்பும் சூழ்நிலையைத் தேர்ந்தெடுக்கலாம்; இது நிச்சயமாக முடியும். ஒரு மனிதன் எந்த எண்ணங்களைத் தன் மனத்தில் விரும்பி வரவேற்கிறானோ அந்த எண்ணங்களை நிறைவேற்றி வைக்க முயல்கிறது இவ்வுலகின் மாபெருஞ் சக்தி. நல்லெண்ணமோ, தீய எண்ணமோ, எதை மனத்தில் கொண்டிருக்கிறோமோ அதற்கேற்ப சந்தர்ப்பங்கள் உருவாகின்றன.

ஒரு மனிதன் தனது பாவகரமான எண்ணங்களை முதலில் நிறுத்தட்டும்; அகில உலகமும் அவனை நோக்கி மென்மையுடன் அணுகுவதைக் காணலாம்; அகில உலகமும் அவனுக்கு உதவ விழைவதைக் காணலாம்.

ஒரு மனிதன் தான் விரும்பும் சூழ்நிலையைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியாது என்பது உண்மை தான். ஆனால் தன் மனத்தில் உலவவிடும் எண்ணங்களைத் தேர்ந்தெடுக்கலாம். இதன்மூலம், மறைமுகமாக தான் விரும்பும் சூழ்நிலையைத் தேர்ந்தெடுக்கலாம்.

சீக்கு பிடித்த சிந்தனைகளையும், பலகீன மான எண்ணங்களையும் ஒரு மனிதன் முதலில் வெளியேற்றட்டும். பிறகு பாருங்கள், அவனது உறுதியான தீர்மானங்களுக்கு உதவ, சந்தர்ப் பங்கள் ஒவ்வோரிடத்திலும் முளைத்து எழுவதை! நல்ல எண்ணங்களை அவன் விரும்பி வரவேற் கட்டும். அதன்பின் அவனை எந்த கொடுமை யான விதியும் ஏதும் செய்யாது; அவமானமும், துன்பங்களும் அவனை அணுகாது.

முப்பட்டைக் கண்ணாடிக் குழாய்க்குள் (Kaleidioscope) எப்படி பல்வேறு வண்ணக் கோல அமைப்புக்கள் தோன்றுகிறதோ அப்படித் தான் நமது வாழ்வும், உலகமும். மாறிவரும் ஒவ்வொரு நிமிடமும், நமது எண்ணங்களுக் கேற்ப பல்வேறு வண்ணக்கோலங்கள் என்ற வாழ்க்கைச் சம்பவங்களை வாழ்வு என்ற முப்பட் டைக் கண்ணாடிக் குழாய் காட்டுகிறது.

நாம் எப்படித் தீர்மானிக்கிறோமோ அப்ப டியே ஆவோம். சூழ்நிலையைக் குற்றஞ்சாட்டும் ஏழ்மைத்தனம் கண்டு ஆத்மா பரிகசிக்கிறது; எதற்கும் சமாதானம் கூறுவதில் தோல்வி, ஒரு பொய்யான திருப்தியைக் காண்கிறது.

எது காலத்தை வெல்லும் ?
வானவெளியை எது வெற்றி காணும் ?

''தற்செயலாய் நிகழ்ந்தது'' என்று
தற்பெருமை பேசும் தந்திரக்காரனை
சூழ்நிலையைக் குறைகாணும்
சுயநலக்காரனை
எது மண்டியிடச் செய்யும் ?

சூழ்நிலை என்ற கொடுங்கோலனுக்கு
விடைகொடுத்து
அவனது மணி மகுடத்தை அகற்றி
அதை ஒரு வேலைக்காரனது தலையில்
எது வைக்கும் ?

மனிதமனத்தின் உறுதி—நம்பிக்கை.
அந்தப்புலனாகா பெருஞ்சக்தி
மரணமில்லா ஜீவனின் நேர் வாரிசு.
உலகின் நிரந்தரமான உண்மை.

கருங்கல் சுவர் குறுக்கே நின்றாலும்
கல்லையும் துளைக்கும் வல்லமை
படைத்தது
இலக்கை நோக்கிச் செல்லும் லட்சியம்
அந்தப்புலனாகா பெருஞ்சக்தி.

தாமதத்தைக் கண்டு தவிக்காதே
பொறுமை கொஞ்சமும் இழக்காதே
நல்லநேரம், வந்துசேரும்
கண்டு கொள்வாய், காத்திரு.

ஆத்மாவின் குரல் ஜீவப்பிரவாகமாய்
எழுந்து
கட்டளை யிடும்போது
கடவுள்களெல்லாம் காரியமாற்ற
காத்திருக்கிறார்கள் உனக்காக.

ஒரு நொந்த முகமும் துக்கக் கோடுகளும் ஏதோ திடீரென்று ஏற்பட்டதல்ல. அவை ஏமாற்றமும் வெறுப்பும் கொண்ட உள்ளத்தின் பிரதிபலிப்புகளே. உடலில் நோய்களைக் கரையச் செய்வதற்கு உற்சாகமான எண்ணத்தைப் போன்ற நல்ல மருந்துவர் யாரும் இல்லை.

# எண்ணமும்–உடல்நலமும்

உடல் மனத்தின் சொல்லுக்குக் கட்டுப்படுகின்ற பணியாள். மனம் போடும் திட்டங்களுக்கு உடல் கட்டுப்பட்டு செயல்படுகிறது. மனம் தன் திட்டங்களை விரும்பி தேர்ந்தெடுத்தாலும் சரி, அல்லது திடீரென்று ஒரு காரியத்தில் ஈடுபட்டாலும் சரி, அதற்கேற்ப உடல் இயங்குகிறது. முறையற்ற எண்ணங்கள் உள்ளத்தில் புகுந்ததும் உடல் உடனடியாக நோயினாலும், அழிவினாலும் தாழ்ந்து போகிறது. மகிழ்வு நிறைந்த அழகிய எண்ணங்கள் மனத்தில் ஆணையாக புறப்படும்போது உடல் இளமையாலும் அழகாலும் போர்த்தப்படுகிறது.

சூழ்நிலையை எப்படி நம் எண்ணங்கள் உருவாக்குகிறதோ அதேபோல நோயும், சுகவாழ்வும் எண்ணங்களில்தான் வேர் கொண்டிருக்கிறது. நோய் பிடித்த எண்ணங்கள் ஒரு நோய் கொண்ட உடலின் மூலம் வெளிப்படுகின்றன. பயம் நிறைந்த எண்ணங்கள் துப்பாக்கிக் குண்டைவிட வேகமாக மனிதனைக் கொன்று விடுகிறது என்பது எல்லோரும் அறிந்த விஷயம். அவை ஆயிரக்கணக்கான மனிதர்களைத் தொடர்ந்து, உறுதியுடன் கொன்று கொண்டே இருக்கிறது. அவர்க்ள் மெதுவாகச் செத்துக் கொண்டிருக்கிறார்கள்.

நோய் வந்து விடுமோ என்று பயப்படுபவர்களே நோயைப் பெறுகிறார்கள். தவிப்பு நமது முழு உடலையுமே நிலை கெடச் செய்கிறது; நோய்க்கிருமிகளுக்கு உடலைத் திறந்துவிடுகிறது. தூய்மையற்ற எண்ணங்கள் — கெட்ட எண்ணங்கள்— உடலால் தூண்டப்படாவிட்டாலும்— நமது நரம்பு மண்டலத்தையே சிதற அடித்துவிடும்.

வலிமை வாய்ந்த, தூய்மை மிகுந்த, மகிழ்வு நிறைந்த எண்ணங்கள் உடலில் புத்துணர்வையும், கருணையையும் ஊட்டி, உடலுக்கு ஊட்டம் தருகின்றன. நமது உடல் நுட்பமான, மசியக்கூடிய ஒரு சாதனம். எந்த எண்ண முத்திரைகள் உள்ளே விழுகின்றனவோ அதற்கேற்ப உடல் இசைந்து செயல்படுகிறது. எண்ணம் பழக்கமாகும் போது அதனுடைய விளைவை உடலில் தோற்றுவிக்கிறது. நல்லதோ கெட்டதோ எண்ணத்திற்கேற்ப விளைவு நேர்கிறது.

மனிதர்கள் தூய்மையற்ற எண்ணங்களை விதைத்து பரவச் செய்தார்களானால் அவர்களது ரத்த ஓட்டம் தூய்மையற்றதாக ஆகிறது. ரத்தம் நஞ்சாக மாறுகிறது. தூய்மையான இதயம் தூய்மையான வாழ்வையும், சுத்தமான உடலையும் உண்டாக்குகிறது. அசுத்தமான மனம், அசுத்தமான வாழ்வையும், புரையோடிப் போன உடலையும் உண்டாக்குகிறது. செயலுக்

கெல்லாம் ஆரம்ப இடம்—நீரூற்று—எண்ணம் தான்; வாழ்வுக்கும் அதன் மலர்ச்சிக்கும் எண்ணம்தான் துவக்கம். நீரூற்றை சுத்தமாக வைத்துக் கொள்ளுங்கள்; எல்லாம் சுத்தமாக இருக்கும்.

எண்ணங்களை மாற்றாத மனிதன், எத்தனை கட்டுப்பாடான உணவு முறைகளை மேற்கொண்டாலும் எந்த உதவியையும் அது அவனுக்கு செய்யாது. எண்ணங்கள் தூய்மையாக இருக்கும்போது தூய்மையற்ற உணவுகளின் மீது அவனுக்கு ஆசை எழுவதில்லை.

தூய்மையான எண்ணங்கள் தூய்மையான பழக்க வழக்கங்களுக்கு காரணமாகின்றன. யோகி— ஞானி— முனிவர் என்றெல்லாம் சொல்லிக் கொள்பவர் தனது உடலை நீராட்டி தூய்மையாக வைத்திருப்பதைப்பற்றி கவலைப் படாதவர், ஒரு தவ சிரேஷ்டரே அல்ல. தனது எண்ணங்களைத் தூய்மையாகவும் வலிமையாகவும் வைத்திருப்பவர்கள், நோய்க்கிருமிகள் தாக்குமோ என்ற பயத்திற்கு ஆளாக வேண்டியதில்லை; அதைப்பற்றிச் சிந்திக்க வேண்டியதில்லை.

உடலை ஒரு கட்டுதிட்டத்திற்கு— ஒரு நெறிக்கு கொண்டு வர வேண்டுமானால் முதலில் உங்கள் எண்ணங்களைப் பாதுகாத்துக் கொள்

உடல் பலகீனமானவன் எப்படி பொறுமையாகப் பயிற்சி செய்து தன்னைப் பலப்படுத்திக் கொள்ள முடியுமோ அதுபோல பலகீனமான எண்ணங்களை உடைய மனிதன் சரியான எண்ணங்களை வளர்த்துக் கொள்வதன் மூலம் தன் வாழ்விற்கு வலிமை ஊட்ட முடியும்.

ளுங்கள். உடலுக்கு புதிய வடிவம் கொடுக்க வேண்டுமானால் மனத்தை முதலில் அழகு செய்யுங்கள். கைவிட்ட நிலை, ஏமாற்றம், பொறாமை, வெறுப்பு முதலிய எண்ணங்கள் உடலின் ஆரோக்கியத்தையும் தேஜஸையும் சூறையாடிவிடும். ஒரு நொந்த முகமும் துக்கக் கோடுகளும், ஏதோ திடீரென்று தற்செயலாக ஏற்பட்டதல்ல. அவை ஏமாற்றமும் வெறுப்பும் கொண்ட உள்ளத்தின் பிரதிபலிப்புக்களே. முகத்தில் தெரியும் சுருக்கங்கள் எல்லாம் தவறு களினாலும், இச்சையினாலும், கர்வத்தினாலும் உண்டானவை.

தொண்ணூற்று ஆறு வயது கொண்ட ஒரு பெண்மணியை நான் அறிவேன். கள்ளங்கபடில்லாத ஒரு இளம் பெண்ணின் கலகலப்பான முகம் அவருக்கு. நடுத்தர வயதைக்கூட தாண்டாத ஒரு மனிதனை நன்றாக அறிவேன்; முகத்தில் தான் எத்தனை பொருத்தமில்லாத கோடுகள்! வளைவுகள்! இனிமையும் கலகலப்பும் ஒரு விளைவை ஏற்படுத்துகிறது; அதிருப்தியும், இச்சையும் மற்றோர் விளைவை ஏற்படுத்து கிறது.

சுத்தமான காற்றையும், நல்ல சூரியவெளிச் சத்தையும் தாராளமாக உள்ளே விடும்போது இனிமை சூழ்ந்த ஆரோக்கியமான வீடு அமை வதுபோல, வலிமையான உடல், பளிச்சென்ற

முகம், நிறைவு கொண்ட தோற்றம் எல்லாம் இன்பம், நல்லெண்ணம், நிறைவு என்ற எண்ணங்களை தாராளமாக உள்ளே விடுவதன் மூலம் விளையும்.

சுய பச்சாத்தாபம் போட்ட கோடுகளை சில வயது வந்தவர்கள் முகத்தில் காணலாம். மற்றும் சிலர் முகத்தில், வலிமையும் தூய்மையான எண்ணங்களும் படம் வரைந்திருக்கின்றன. இன்னும் சிலருக்கு மிருக இச்சை செதுக்கிய முகம்! யாருக்கு இதன் வித்தியாசம் தெரிவதில்லை?

அமைதியாக மறையும் அந்தி சூரியனைப் போல நேர்மையாக வாழ்ந்தோரிடம் வயது மென்மையாக அடங்கி ஒளிவிடுகிறது. சமீபத்தில் ஒரு தத்துவ ஞானியைப் பார்த்தேன். அவர் இறக்கும் தருவாயில் இருந்தார். வருஷங்கள் தான் ஓடினவே ஒழிய அவர் வயதேறியவராக தோற்றமளிக்கவில்லை. வாழ்ந்ததைப் போலவே இனிமையாக, அமைதியாக அவர் காலமானார்.

உடலில் நோய்களைக் கரையச்செய்வதற்கு உற்சாகமான எண்ணத்தைப் போன்ற நல்ல மருத்துவர் யாரும் கிடையாது. துக்கம் சோகம் என்ற இருளை ஒழிப்பதில் நல்லெண்ணம் தரும் ஆறுதல் போல வேறு எதுவுமே தராது.

கெட்ட எண்ணமும், எதிலும் துன்பத்தையே எதிர்பார்ப்பதும், சந்தேகமும், பொறாமையுமான வாழ்க்கை நடத்துவதும் நமக்கு நாமே சிறையை அமைத்துக்கொண்டு கஷ்டப்படுவதற்கு ஒப்பாகும்.

எல்லோரும் வளமுடன் வாழவேண்டுமென்று எண்ணுவது, எல்லோருடனும் உற்சாகமாகப் பழகுவது, எல்லோரிடமும் இருக்கும் நல்லதைப் பொறுமையுடன் தெரிந்துகொள்ள முயல்வது— இப்படிப்பட்ட சுயநலமற்ற எண்ணங்கள்தான் சொர்க்கத்தின் நுழைவாயில்கள்.

ஒவ்வொரு நாளும் எல்லா உயிர்களிடத்தும் அன்பு காட்டி வாழுங்கள். வாழ்வில் சாந்தத்தைக் கடைப்பிடியுங்கள். மாசுமறுவற்ற நிறைவு உங்கள் வாழ்வில் பொங்குவதை உணர்வீர்கள்.

தனி மனித பொறுப்புதான் வாழ்வின் இயக்கத்திற்கு முழுகாரணம். ஒரு மனிதனது தூய்மையான நிலையும் அல்லது அவன் பெற்றிருக்கும் தூய்மை யற்ற நிலையும் அவனால் உண்டாக்கப் பட்டதுதான் — மற்றவனால் அல்ல. அவனால்தான் அதை மாற்ற முடியும் — மற்றவர்களால் அல்ல.

## எண்ணமும் நோக்கமும்

நமது எண்ணமானது ஒரு லட்சியத்துடன்— ஒரு நோக்கத்துடன் — தொடர்பு கொள்ளும் போது புத்திசாலித்தனமான சாதனைகள் நிகழ்கின்றன. பெரும்பான்மையோரிடம் நாம் காண்பதென்ன ? எண்ண ஓட்டங்கள், வாழ்க்கை என்ற கடலில் திசையின்றி மிதந்து கொண்டிருக்கின்றன. வாழ்வில் நோக்கமில்லாதது ஒரு குறை. விபத்தையும் அழிவையும் தவிர்த்து வாழ்க்கை எனும் மரக்கலத்தை நாம் செலுத்த வேண்டுமானால் இப்படி திசையின்றி மிதக்கும் வாழ்க்கை நீடிக்கக் கூடாது.

வாழ்வில் முக்கிய நோக்கம் இல்லாதபோது சின்னஞ்சிறு அற்பக் கவலைகள் நம்மைச் சூழ்கின்றன—பயம், சங்கடம், சுய பரிதாபம் என்று. தெரிந்து, திட்டமிட்டு செய்யும் பாவங்கள், எப்படி நம்மை வேறு திசையில் அழைத்துச் சென்று பலனைத் தருகின்றனவோ அதுபோல இந்த அற்ப கவலைகள் நம்மை தோல்விக்கும், துக்கத்திற்கும், நஷ்டத்திற்கும் அழைத்துச் செல்கின்றன. இப்பிரபஞ்சம் சக்தியுடனும் வலிமையுடனும் உருவாகி வரும் ஒன்று. அதில் பலகீனங்களுக்கு இடமில்லை.

ஒரு மனிதன் தன் இதயத்தில் ஒரு நியாயமான லட்சியத்தை உருவாக்கிக்கொண்டு

அதை அடைய முயல வேண்டும். தனது சிந்தனைகளின் மையப்புள்ளியாக இந்த லட்சியம் இருக்க வேண்டும். அது ஒரு தெய்வீக— ஆன்மிக லட்சியமாக இருக்கலாம்; அல்லது உலக சம்பந்தமான ஒரு பொருள் பற்றியதாக இருக்கலாம். அவனுடைய இயல்புக்கும், அந்த நேரத் தேவைக்கும், ஏற்றதாக இருக்கலாம். எது எப்படி இருந்தாலும் மனிதன் தனது எண்ண சக்தியை ஒருமுகப்படுத்த வேண்டும். அப்படி ஒன்று திரட்டப்பட்ட சக்தியை, தான் எடுத்துக் கொண்ட லட்சியத்தின் மீது நிரந்தரமாக செலுத்த முற்பட வேண்டும். அதுதான் அவனது முக்கிய கடமையாய் இருக்க வேண்டும். லட்சியத்தை அடைவதில் அவன் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். மாறாக, மேலோட்டமான கற்பனைகளிலும், ஆசைகளிலும் எண்ணங்களை அலையவிடக் கூடாது. இதுதான் சுய கட்டுப்பாட்டின் ராஜவீதி; எண்ணங்களை ஒருமுகப் படுத்தும் வழி.

தனது லட்சியத்தை அடைவதில் ஒருவன் பலமுறை தோற்கலாம். திரும்பத்திரும்ப தோற்க நேரிடலாம். பலகீனத்திலிருந்து அவன்விடுபடும் வரை இத்தகைய தோல்விகள் அவன் வாழ்வில் நிச்சயமாக நிகழும். ஆனால், அவன் தன்னுள் வளர்த்துக் கொண்ட மனஉறுதி அவனது இயல்பான குணமாக மாறி வலிமை தருகிறதே

அதுதான் வெற்றியின் உரைகல். வர இருக்கும் வெற்றிக்கும், வலிமைக்கும் சக்திக்கும் இதுதான் துவக்கம்.

உயர் லட்சியத்திற்கு தயாராகாதவர்கள் அல்லது உயர் லட்சியம் இல்லாதவர்கள், தங்களது கடமைகளை அப்பழுக்கின்றி நேர்மையாக செய்து வருவதில் கவனம் செலுத்த வேண்டும். செய்யும் வேலை அற்பமானதாக இருக்கலாம்; ஆனாலும் அதை நேர்மையுடன் செய்யக் கற்றுக் கொள்ள வேண்டும். இதன் மூலம் எண்ணங்களை ஒன்று திரட்டி ஒரு இலக்கை நோக்கி செலுத்தும் வழி முறையை அறிந்து கொள்ளலாம்; மன உறுதியையும், சக்தியையும் வளர்க்கலாம். இப்படிச் செய்துவரும் போது ''செய்ய முடியாத காரியம் என்பது எதுவுமே இல்லை'' என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

முயற்சியினாலும், பயிற்சியினாலும் தன் வலிமையை வளர்த்துக் கொள்ள முடியும் என்று தெரிந்து கொள்ளும்போது ஒரு பலகீனமான ஆத்மா கூட, உடனடியாக வலிமை பெறுகிறது. முயற்சியுடன் முயற்சியைச் சேர்த்து, பொறுமையுடன் பொறுமையைச் சேர்த்து, வலிமையுடன் வலிமையைச் சேர்த்து, ஆத்மா தடையில்லா வளர்ச்சி பெறுகிறது; தெய்வீக வலிமை பெற்று வளர்கிறது.

உடலால் பலகீனமானவன் எப்படி பொறுமையாகப் பயிற்சி செய்து தன்னைப் பலப்படுத்திக் கொள்ள முடியுமோ அது போல பலகீனமான எண்ணங்களை உடைய மனிதன் சரியாக எண்

ணங்களைக் கொள்வதன் மூலம் தன் சிந்தனை களுக்கு வலிமை ஊட்ட முடியும்.

நோக்கமின்மையையும், பலகீனத்தையும் தூர எறிந்து விட்டு, ஒரு நோக்கத்துடன் சிந்திக்கத் துவங்கும் ஒரு மனிதன் வலிமை படைத்தவர்களின் வரிசையில் சேருகிறான். தோல்வி கண்டால்கூட சாதனைப் பாதையில் அது ஒரு பாடம் என்பதை உணர்கிறான் ; தன் லட்சியத்திற்கேற்ப சூழ்நிலை உருவாவதைக் காண்கிறான் ; அவன் வலிமையுடன் சிந்திக் கிறான் ; அச்சமின்றி முயல்கிறான் ; ஒரு தலைவனுக்கான லாவகத்துடன் சாதிக்கிறான்.

ஒரு லட்சியத்தை மனதில் வாங்கிக்கொண்ட பின், அதை சாதிப்பதற்குள்ள நேர்வழியை தன் மனத்தில் குறியிட்டு திட்டமிட வேண்டும். வலது புறமோ, இடது புறமோ பார்க்காமல் லட்சி யத்தை முன் வைத்து நேரே நடக்க வேண்டும். சந்தேகமும் பயமும் அறவே நீக்கப்படவேண்டும். ஏனெனில், சந்தேகமும் பயமும் மனித முயற்சி யைப் பொடிப் பொடியாக்கிப் பாதையை தாறு மாறானதாகவும், பயனற்றதாகவும், ஆக்கு கிறது. சந்தேகமும் பயமும் நிறைந்த மனம் எதையும் சாதிப்பதில்லை ; என்றும் சாதித்த தில்லை. தோல்விக்குத்தான் அவை அழைத்துச் செல்கின்றன. பயமும், சந்தேகமும் நுழையும் போது—லட்சியம், துடிப்பு, செய்துமுடிக்க வேண்டுமென்ற சக்தி—என்ற எல்லா வலிமை யான எண்ணங்களும் செத்துப் போகின்றன.

'நம்மால் முடியும்' என்ற நம்பிக்கையி லிருந்துதான் ''செய்து முடிப்பேன்'' என்ற மன உறுதி துளிர்க்கிறது. அறிவின் மிகப் பெரிய எதிரிகள் சந்தேகமும் பயமும்தான். அதை மனத் தில் தேக்கி ஊக்கமூட்டுபவன்,— அதை அழிக் காதவன்— வாழ்வின் ஒவ்வொரு படியிலும் தடு மாறுகிறான்.

சந்தேகத்தையும், பயத்தையும் வென்றவன் தோல்வியை வென்றவன். அவனது ஒவ்வொரு எண்ணமும் ஒரு பெருஞ் சக்தியுடன் இணைந்து செயல்படுகிறது. அவன் எல்லா சங்கடங்களை யும் வீரத்துடன் சந்திக்கிறான்; புத்திசாலித் தனத்துடன் சங்கடங்களிலிருந்து மீள்கிறான்.

அவன் சரியான காலங்களில் தன் லட்சிய விதைகளை விதைக்கிறான். அவை சரியானபடி பூத்து, காய் கனிகளைக் கொண்டு தருகின்றன. அவை பிஞ்சிலே வெம்பி விழுவதில்லை.

ஒரு துணிவான எண்ணம் ஒரு நோக்கத் துடன் இணைக்கப்படும்போது ஆக்க சக்தியாக மாறுகிறது. இதை உணர்ந்து கொள்ளும் மனிதன் உயர்ந்தவனாக, வலிமை படைத்த வனாகத் தன்னை உருவாக்கிக் கொள்கிறான். சஞ்சலமான எண்ணங்களிலிருந்தும், மாறி மாறி வரும் உணர்வின் மோதல்களி லிருந்தும் தன்னைத் தடுத்துக் கொள்கிறான். தனது மன சக்திகளைப் புரிந்துகொண்டு அவற்றை ஆட்டுவிக்கும் சூத்திரதாரியாக ஆகிறான். புத்திசாலியான, விஷயம் தெரிந்த மனிதனாக ஆகிறான்.

பேராசைக்காரனுக்கு சாதகமாக இயங்குவதில்லை இந்தப் பிரபஞ்சம். நாணயமற்றவனுக்கு சாதகமாய் செயல்படுவதில்லை, இப்பிரபஞ்சம். மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது அப்படிச் சில சமயம் தோன்றலாம்.

நியாயவானுக்கும், ஒழுக்கம் நிறைந்தவனுக்கும் தான் அது உதவுகிறது.

## எண்ணமும் சாதனையும்

மனிதன் அடைவதும் அடைய முடியாமல் தோல்வியுறுவதும் அவனது எண்ணங்களின் விளைவுகளே. ஒரு நியாய விதிமுறைகளுக்குக் கட்டுப்பட்டு இப்பிரபஞ்சம் இயங்குகிறது. எப்படி அதன் சமநிலை தவறினால் இப்பிரபஞ்சமே அழிந்து விடுமோ அதே போல தனி மனித பொறுப்பு என்பது தனி மனித வாழ்வின் இயக்கத்திற்கு முழு காரணம்.

ஒரு மனிதனது வலிமையும், பலகீனமும், தூய்மையும், தூய்மையற்ற நிலையும், அவனுக்குச் சொந்தமானதுதான்—மற்றவனுக்கல்ல. அவனால்தான் அந்த நிலை வந்து சேருகிறது— மற்றவர்களால் அல்ல. அவனால்தான் அதை மாற்ற முடியும்—ஒருநாளும் மற்றவர்களால் அல்ல. அவனுடைய இன்றைய நிலைக்கும் அவன்தான் காரணம்—மற்றவர் அல்ல.

அவனது இன்ப துன்பங்கள் அவனுள்ளிருந்தே கொஞ்சங் கொஞ்சமாக வளர்ச்சி பெறுகின்றன. எப்படி எண்ணுகிறானோ அப்படி ஆகிறான். அவன் எப்படி தொடர்ந்து எண்ணுகிறானோ அதற்கேற்ற நிலையில் அவன் தொடர்ந்து வாழ்கிறான்.

ஒரு வலிமை வாய்ந்த மனிதன், பலகீன மானவனுக்கு எந்தவிதத்திலும் உதவமுடியாது- அந்த பலகீனன் உதவியை விரும்பி வரவேற்றால் ஒழிய. அப்போது கூட அந்த பலகீனன் தன்னைத்தானே பலசாலியாக்கிக் கொள்ள வேண்டும். தன்னுடைய சொந்த முயற்சியினால், பிறரிடம் தான் கண்டு வியக்கும் வலிமையை, அவன் வளர்த்துக் கொள்ள வேண்டும். அவனுடைய நிலையை, அவன் ஒருவனால்தான் மாற்ற முடியும்.

மனிதர்கள் வழக்கமாக எண்ணிக் கொள்கிறார்கள் ; பேசுகிறார்கள் : ''பலர் அடிமையாயிருப்பதன் காரணம், ஒருவன் கொடுங்கோலனாய் இருப்பதனால் தான். ஆகவே அந்தக் கொடுங்கோலனை வெறுப்போம்!'' என்று. இப்போது ஒரு சிலர் இதற்கு நேர் மாறான தீர்ப்பை வழங்குகிறார்கள். ''ஒருவன் கொடுங்கோலனாய் இருப்பதற்கு காரணம், பலர் அடிமைப்பட்டு கிடப்பதனால்தான். ஆகவே அடிமைகளை கேவலப்படுத்தி ஒதுக்குவோம்,'' என்கிறார்கள்.

உண்மை என்னவென்றால் கொடுங்கோலனும் அடிமையும் அறியாமையின் கூட்டாளிகள். பார்ப்பதற்கு அவர்கள் ஒருவருக்கு மற்றவர் தீங்கு புரிவதுபோல் தோன்றினாலும், அவர்கள் உண்மையிலேயே தங்களுக்குத்தான் தீங்கு புரிந்து கொள்கிறார்கள். அடிமைப்பட்டு கிடக்கும் பலகீனமான மனிதனின் வாழ்வில் இயற்கை சட்டம் செயல்படுகிறது என்பதைத்தான்

உண்மை அறிவு நமக்கு தெரிவிக்கிறது ; அதே போல, கொடியவனின் அதிகார துஷ்பிரயோகத்திலும் சட்டம் செயல்பட்டு தண்டிக்கப்படுவதைத் தான் இந்தப் பிரபஞ்ச அறிவு எடுத்துக் காட்டுகிறது.

இந்த இரண்டு நிலைகளிலும் நிலவும் சங்கடங்களையும் துன்பங்களையும் பார்க்கின்ற பரிபூரண அன்பு என்ற சக்தி கொடுங்கோலனையும், அடிமையையும் குற்றஞ் சாட்டுவதில்லை. இருவரையும் கருணையால் அரவணைத்து தழுவி நிற்கிறது.

பலகீனத்தை வென்ற மனிதன், சுயநலமான எண்ணங்களை தூக்கித் தூர வைத்தவன், கொடியவனாயிருப்பதுமில்லை, அடிமையாயிருப்பதுமில்லை. அவன் சுதந்திர மனிதன்.

ஒரு மனிதன் தன்னுடைய எண்ணங்களை உயர்த்திக் கொள்வதன் மூலமே இருக்கிற இடத்திலிருந்து எழமுடியும் ; வெற்றி காண முடியும் ; சாதிக்க முடியும். தனது எண்ணங்களை உயர்த்திக்கொள்ள மறுப்பதன் மூலம் அவன் பலகீனமடைகிறான் ; ஏழையாகிறான் ; நொந்து போகிறான்.

இவ்வுலகில் சாதனை புரிய விரும்பும் மனிதன் முதலில் தன் எண்ணங்களை உயர்த்திக்கொள்ள வேண்டும். மனிதனை அடிமையாக்கும் மிருக இச்சைகளிலிருந்தும் தூண்டுதல்களிலிருந்தும் விடுபட வேண்டும். வெற்றி அடையத் தனது

நேர்மையான எண்ணங்கள் தந்த வெற்றியை, சரியாக கண்காணிப்பதன் மூலம்தான் நிரந்தரமாக்க முடியும்; பாதுகாக்க முடியும். வெற்றி வந்ததும் பலர், முன்பு கொண்டிருந்த மன உறுதியை இழந்து விடுகிறார்கள்; ஆணவம் தலைக்கேறி விடுகிறது; தோல்வி அவர்களை வேகமாகத் தழுவுகின்றது.

எல்லா மிருக உணர்வுகளையும் சுயநலத்தையும் விட்டு விட வேண்டும் என்பதல்ல; அதில் ஒரு பகுதியாவது தியாகம் செய்யப்பட வேண்டும்.

ஒரு மனிதனது மனத்திலே எழும் முதல் எண்ணம் மிருக இச்சைகளின் தூண்டுதல் தான் என்றால், அவனால் ஒருநாளும் தெளிவாகச் சிந்திக்கவோ, ஒழுங்காக திட்டமிடவோ முடியாது. தன்னிடம் மறைந்து கிடக்கும் மாபெரும் சக்திகளை அவன் அறிந்துகொள்ள முடியாது; வளர்க்க முடியாது. எதை எடுத்தாலும் அவன் தோற்றுத்தான் போவான். தனது எண்ணங்களை ஆண்மையுடன் கட்டுப்படுத்தத் துவங்காதபோது, தனது வாழ்வில் நிகழும் சம்பவங்களை அவனால் கட்டுப்படுத்த இயலாது; முக்கியமான பொறுப்புக்களை அவனால் ஏற்க முடியாது. தனித்து நிற்க முடியாது; சுதந்திரமாகச் செயல்பட அவனுக்கு தகுதி கிடையாது. எந்த எண்ணங்களைத் தேர்ந்தெடுக்கிறானோ அவைதான் அவன் வாழ்வை கட்டுப்படுத்துகின்றன; நடத்துகின்றன.

தியாகமில்லாமல், சாதனை இல்லை; முன்னேற்றமில்லை. ஒரு மனிதன் இவ்வுலகில் காணும் வெற்றி, அவன் எவ்வளவு தூரம் தனது அலைக்கழிக்கும் மிருக உணர்வுகளை தியாகம் செய்திருக்கிறான் என்பதைப் பொறுத்தது.

எப்படி தன்னுடைய திட்டங்களை வளர்ப்பதில் கவனத்தைச் செலுத்தினான் என்பதைப் பொறுத்தது. எப்படி தனது மன உறுதியையும், சுய காலிலே நிற்கும் தன்மையையும் வளர்த்து, தன்னை வலிமைப்படுத்திக் கொண்டான் என்பதைப் பொறுத்தது. அதுதான் அளவு கோல்.

தனது எண்ணங்களை எவ்வளவு உயர்வாக அமைக்கிறானோ அதற்கேற்ப அவன் அதிக ஆண்மை பெற்றவனாகிறான்; நேர்மை மிக்கவனாகிறான்; நியாயம் மிகுந்தவனா கிறான். அதிகமான வெற்றிகளை வாரிக் குவிக்கிறான்; அவனது சாதனைகள், நிரந்தர மாகவும், தெய்வ அனுக்கிரகம் பெற்றதாகவும் அமைகின்றன.

பேராசைக்காரனுக்கு சாதகமாக இயங்குவ தில்லை, இந்தப் பிரபஞ்சம். நாணயமற்ற வனுக்கு — பொல்லாதவனுக்கு — சாதகமாய் இருப்பதில்லை, இந்தப் பிரபஞ்சம். மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது, அப்படிச் சில சமயம் தோன்றலாம். அது நியாயவானுக் குத்தான் உதவுகிறது; பெருந்தன்மை மிக்கவ னுக்கு, ஒழுக்கம் நிறைந்தவனுக்குத்தான் அது உதவுகிறது. இந்த உண்மையைக் காலத்தைக் கடந்த பெரிய மத குருமார்களெல்லாம் பல்வேறு வார்த்தைகளில் கூறி இருக்கிறார்கள். ஒரு மனிதன் தனது எண்ணங்களை உயர்த்தி

மேன்மேலும் தொடர்ந்து தூய்மையாளனாக வாழும்போது இந்த உண்மையைப் புரிந்து கொள்ள முடியும்; நிரூபிக்க முடியும்.

அறிவின் சாதனை என்பது என்ன ?

அது உண்மையைத் தேடும் உயர் எண்ணங்களின் உச்சம். வாழ்விலும், இயற்கையிலும் நிலவும் அழகையும் உண்மையையும் காணும் முயற்சிதான் அறிவின் சாதனைகள். சில சமயம் அந்த சாதனைகள் தற்பெருமையுடன் தொடர்பு கொண்டிருக்கின்றன. சுய லாபம் இழையோடும் குறிக்கோளாய் மாறிவிடுகின்றன. ஆனால் சாதனைகள் அந்த குணங்களால் — தற்பெருமையால், சுயலாபத்தால் — ஏற்பட்ட விளைவுகள் அல்ல. சாதனைகள் எல்லாம் ஒரு மனிதன் நெடுங்காலம், தொடர்ந்து கஷ்டப்பட்டு உழைத்ததன் விளைவு; தூய்மையான தன்னலமற்ற எண்ணங்களின் முடிவு.

புனிதமான ஆசைகளின் உந்துதல்களினால் ஏற்பட்ட பூரணத்துவம்தான் ஆன்மிக சாதனைகள். உயர்ந்த எண்ணங்களிலும் பெருந்தன்மையான எண்ணங்களிலும் உருவாகி அதிலே நிரந்தரமாக வாழ்பவன் — தூய்மையும், தன்னலமற்றும் வாழ்பவன் — தேர்ந்த ஞானம் பெற்றவனாகவும், புனிதமான மனிதனாகவும் ஆகிறான். செல்வாக்கும் தெய்வ அனுக்கிரகமும் பெற்றவனாகிறான். சூரியன் உச்சத்தில்

ஜொலிப்பது எவ்வளவு நிச்சயமோ சந்திரன் பௌர்ணமியன்று தண்ணொளி வீசுவது எவ்வளவு நிச்சயமோ அவ்வளவு நிச்சயமாக— அந்த நிலை வந்தே தீரும்.

முயற்சி நம் தலையில் சூட்டும் மணி மகுடம் தான் சாதனைகள். எண்ணங்களின் வெளிப் பாடுதான் அவை. சுயகட்டுப்பாடு, உறுதியான தீர்மானம், தூய்மை, நேர்மை என்று எண்ணங் களைச் சரியான திசையில் செலுத்தும் மனோ பாவம் கொண்டிருப்பவன் எழுகிறான்; உயர் கிறான். மிருக உணர்வுகளினால், சோம்பலி னால், தூய்மையற்ற நிலையினால், நேர்மை யற்ற செயல்களினால், ஊழல்களினால், குழப்ப எண்ணங்களால் மனிதன் தாழ்கிறான்; வீழ் கிறான்.

ஒரு மனிதன் உலகில் உயர் வெற்றியை அடைய முடியும்; ஆன்மிக வெளியில் உயர் நிலைகளைத் தொட முடியும். அதேபோல ஆணவம், சுயநலம், நேர்மையற்ற எண்ணங்கள் அவனை ஆட்கொள்ளும்போது அவன் பலகீன மான அவலநிலைக்கு தாழ்ந்து போக முடியும்.

நேர்மையான எண்ணங்கள் தந்த வெற்றியைச் சரியாக கண்காணிப்பதன் மூலம் தான் நிரந்தரமாக்க முடியும்; பாதுகாக்க முடியும். வெற்றி வந்ததும் பலர் முன்பு கொண்டிருந்த மன உறுதியை இழந்து

விடுகிறார்கள் ; தோல்வி அவர்களை வேகமாக தழுவுகின்றது.

தொழிலிலானாலும் சரி, அறிவியல் அல்லது ஆன்மிகத் துறையானாலும் சரி, சாதனை என்பது எண்ணங்களை சரியான திசையில் செலுத்துவதைப் பொறுத்திருக்கிறது. அந்த உண்மைதான் அங்கே செயல்படுகிறது ; அந்த நெறிமுறைதான், அங்கே இயங்குகிறது. அடையும் பொருளில் தான் வித்தியாசம்.

சிறிய சாதனைகளைச் சாதிக்க விரும்புபவர்கள் சிறிய அளவில் தியாகம் செய்தால் போதும் ; அதிகம் சாதிக்க விரும்புபவர்கள் அதிக தியாகம் செய்ய வேண்டும் ; மகத்தான சாதனை புரிய, மகத்தான தியாகம் செய்யத் தயாராய் இருக்க வேண்டும்.

எந்த சாதனையும் முதன் முதல்—கொஞ்ச காலம்வரை— கனவாகத்தான் இருந்தது. மிகப் பெரிய ஆலமரம் ஒரு சிறு விதையில் உறங்குகிறது. வானில் பறக்கும் வல்லூறு ஒரு சிறு முட்டைக்குள் காத்திருக்கிறது. ஆத்மா காணும் லட்சிய தரிசனத்தில், விழிப்புறாற தேவதையின் சிலிர்ப்புக்கள் கேட்கின்றன.

நாளைய நிஜங்களின் இன்றைய விதைகள் தான் நம் கனவுகள்.

# லட்சியமும் லட்சிய தரிசனமும்

லட்சியத்தை தரிசனமாகக் காண்பவர்கள் தான் உலகைக் காப்பாற்றும் உயர் மனிதர்கள்.

நாம் காணுகிற இவ்வுலகை ஒரு புலனாகாத சக்தி இயக்கி வருகிறது. அதே போல தாங்கள் கண்ட பல்வேறு அநுபவங்களின் மூலமும், சுய சோதனைகளின் மூலமும் யார் லட்சிய தரிசனம் பெறுகிறார்களோ அவர்களால் தான்— அவர்களது லட்சியக் கனவின் புலனாகாத சக்தியின் மூலம் தான்— இவ்வுலகம் உயிர் வாழ்கிறது. எத்தனையோ சோதனைகள் நேர்கின்றன; எனினும் அந்த லட்சியக் கனவு தான் அவர்களுக்கு எதையும் சமாளிக்கும் வலிமையை அளிக்கிறது.

மனித சமுதாயம் தனது தீர்க்க தரிசிகளை மறந்து விடமுடியாது. அவர்களது லட்சியம் அழிந்துவிட—மறைந்துவிட—நாம் அனுமதிக்கக் கூடாது. ஏனெனில் அவை மனிதனை வாழ்விக்கும் லட்சியங்கள். "ஒரு நாள் இது நிஜமாகும்!" என்ற நம்பிக்கையில் தான் மனித சமுதாயம் வாழ்கிறது. லட்சிய வாதிகளின் லட்சிய தரிசனத்தை ஒரு நாள் மனித சமுதாயம் புரிந்து கொள்ளும்; தானும் தரிசனம் செய்யும்.

சிற்பி, ஓவியர், இசை அமைப்பாளர், கவிஞர், தீர்க்கதரிசி, ஞானி—இவர்கள் எல்லாம் நாளைய உலகை நிர்மாணிப்பவர்கள். சொர்க்கத்தை பூமியிலே அமைத்துத்தரும் புத்துலக சிற்பிகள். அவர்கள் வாழ்ந்ததனால்தான் இன்று இவ்வுலகம் அழகு பெற்றிருக்கிறது. அவர்களில்லாவிட்டால்,— எவ்வளவோ பாடு பட்டு உழைத்தாலும்—இவ்வுலகம் பூண்டற்றுப் போயிருக்கும்.

உயர்ந்த லட்சியத்தைத் தன் இதயத்திலே ஏந்தியிருப்பவன்— ஒரு அழகிய எதிர்காலத்தை, உருவகித்திருப்பவன் — ஒரு நாள் அதை அடைந்தே தீருவான். ''வேறோர் நாடிருக்கிறது'' என்ற கற்பனையைக் கண்டு வந்தார் கொலம்பஸ்; அதைக் கண்டு பிடித்தார். ''இது பரந்த உலகம். இங்கே பல்வேறு கோள்கள் இருக்கின்றன,'' என்று நம்பினார் கோபர்னிகஸ்; அந்த உண்மையை அவர் உலகிற்கு அளித்தார். மாசு மறுவற்ற அழகையும், பூரண சாந்தியையும் தனது ஆன்மிக உலகில் புத்தர் கண்டார். அங்கே புகுந்தார்; மக்களையும் அழைத்துச் சென்றார்.

கற்பனையை உள்ளத்தில் வளர விடுங்கள்; லட்சியத்தைத் தரிசனம் செய்யுங்கள். இதயத்தைத்தூண்டிவிடும் இசைக்கு ஊக்கம் தாருங்கள். சிந்தனையை அழகு படுத்தும் எண்ணங்களை— தூய்மையைப் போர்த்தி வரும் அழகான

எண்ணங்களைப்— போற்றுங்கள். உங்கள் சூழ்நிலையில் மகிழ்ச்சி துள்ளும் ; சொர்க்கம் தென்படும்.

நீங்கள் மட்டும் உங்கள் லட்சியத்தில் உண்மையான பற்றுடன் ஈடுபட்டீர்களானால், நீங்கள் விரும்பும் உலகம் ஒரு நாள் உங்கள் கண்முன் உருவாகும்.

ஆசைப்படுவது அடைவதற்காக.
அடைய வேண்டும் என்ற துடிப்பு
சாதிப்பதற்காக.

மனிதனது தாழ்வான எண்ணங்கள் பூரணமாக ஈடேறும் என்பதும், அவனது தூய்மையான உயர் லட்சியங்கள் ஜீவிக்க முடியாமல் மரித்துவிடும் என்பதும் உண்மையல்ல. அது அல்ல, இயற்கையின் விதி ; அப்படிப்பட்ட நிலை ஒரு நாளும் ஏற்படுவதில்லை.

'கேளுங்கள் கொடுக்கப்படும்' என்பது தான் உண்மை. உயர் லட்சியங்களைக் கனவு காணுங்கள். எதைக் கண்டு வருகிறீர்களோ அதுவாக நீங்கள் மாறுவீர்கள். உங்கள் லட்சிய தரிசனம் தான், நீங்கள் ஒரு நாள் எப்படி மாறப் போகிறீர்கள், என்பதன் சத்திய தரிசனம் ; திரை விலகி, ஜீவ நடை போடும் தீர்க்க தரிசனம்.

எந்த சாதனையும் முதன்முதல்— கொஞ்ச காலம்வரை— கனவாகத்தான் இருந்தது. மிகப் பெரிய ஆலமரம் ஒரு சிறு விதையில் உறங்குகிறது. வானில் பறக்கும் வல்லூறு ஒரு சிறு முட்டைக்குள் காத்திருக்கிறது. ஆத்மா காணும் லட்சிய தரிசனத்தில், விழிப்புற்ற தேவதையின் சிலிர்ப்புக்கள் கேட்கின்றன. நாளைய நிஜங்களின். இன்றைய விதைகள் தான் நம் கனவுகள்.

உங்கள் சூழ்நிலை இன்று உங்கள் லட்சியங்களுக்கு ஏற்றதாக இல்லாமல் இருக்கலாம். அது தொடர்ந்து அப்படியே இருக்கப் போவதில்லை—நீங்கள் மட்டும் ஒரு லட்சியத்துடன் தொடர்ந்து முயல்வீர்களானால். உள்ளே பயணம் செய்து கொண்டு, வெளியே ஒரே நிலையில் குத்துக்கல்லாக நின்றுவிட்டோம் என்பது உண்மையல்ல.

இதோ ஒரு இளைஞன். வறுமையின் பிடியில். சுகாதாரமற்ற சூழ்நிலையில். உழைத்து உழைத்து ஓடானவன். தினந்தோறும் நெடுநேரம் வேலை செய்பவன். படிக்காதவன். நாகரிகத்தின் நெளிவு சுளிவுகளில் அறிமுகமில்லாதவன். ஆனால் அவன் உயர் விஷயங்களைப் பற்றி எண்ணுகிறான்; கனவு காண்கிறான். அறிவைப்பற்றி யோசிக்கிறான். தீர்க்கமாகச் செயல்படுவதைப் பற்றி எண்ணுகிறான்; அழகைப்பற்றி, நளினத்தைப்பற்றி எல்லாம் சிந்திக்கிறான்.

ஒரு இனிமையான வாழ்வை மனத்தில் தினமும் உருவகிக்கிறான். தினந்தோறும், தன் மனத்தில் கட்டிடம் கட்டிக் கொண்டிருக்கிறான். சுதந்திரமாக செயல்படும் கனவும், வசதியாக வாழும் கனவுகளும் அவனைப் பற்றிக் கொள்கின்றன. அவனால் சும்மா இருக்க முடியவில்லை; கனவுகள் செயலைத் தூண்டுகின்றன. தனது ஓய்ந்த வேளைகளில் எல்லாம், தன் முன்னே உள்ள வழிகளையும் வாய்ப்புக்களையும் பற்றி சிந்திக்கிறான்; செயல்படுகிறான்— அவை கொஞ்சம்தான் என்றாலும்; தனக்குள் ஆழ்ந்து கிடக்கும் சக்தியையும், திறமைகளையும் வளர்ப்பதில் அவன் கவனம் செலுத்துகிறான்.

அவனிடம் அத்தனை மாறுதல்கள்! அவன் வேலை செய்யுமிடத்தில் அவனை வைத்துக் கொள்ள முடியாத அளவிற்கு மாறுதல்கள்! அவன் இருக்கின்ற சூழ்நிலை அவன் மன இயல்புகளுக்கு ஏற்றதாக இல்லை. மேலங்கி கீழே நழுவி விழுவதைப்போல அவனது சூழ்நிலை அவனைவிட்டு அகல்கிறது. அவனது ஆசைகளுக்கும், பரந்த மனத்திற்குமேற்ப பல்வேறு வாய்ப்புக்கள் துளிர்க்கின்றன. அவன் தனது பழைய சூழ்நிலைகளிலிருந்து நிரந்தரமாக விடுபடுகிறான்.

பல ஆண்டுகளுக்குப்பின் இந்த இளைஞனை ஒரு வளர்ந்த முழு மனிதனாகச் சந்திக்கிறோம்.

வாழ்வின் எல்லா நிகழ்ச்சிகளிலும் முயற்சிகள் இருக்கின்றன; விளைவுகள் இருக்கின்றன.

நமது முயற்சியின் வலிமைதான் விளைவின் அளவுகோல். அது தான் உண்மை. அதிர்ஷ்டமல்ல.

சில மனோவசியங்கள் கை வரப்பெற்ற தலைவனாக அவனை நாம் பார்க்கிறோம். நிகரற்ற சக்தி படைத்தவனாக—உலகை ஆட்டு விக்கும் செல்வாக்கு படைத்தவனாக—நாம் அவனைச் சந்திக்கிறோம். மகத்தான பொறுப் புக்களின் சூத்திரக் கயிற்றைஅவன் தன் கையில் வைத்திருக்கிறான்.

அவன் பேசுகிறான்! பலருடைய வாழ்க் கையே மாறிவிடுகிறது. அவன் வாயிலிருந்து உதிரும் சொல்முத்துக்களைப் பொறுக்கிக் கொள்ள உலகம் திரண்டு நிற்கிறது. மக்கள் தங்கள் வாழ்க்கை நெறிகளையே மாற்றி அமைத்துக் கொள்கிறார்கள். பொங்கி எழும் காலைச் சூரியன்போல அவன் உலகின் ஒளிமய மாகிறான். எண்ணிலடங்கா வாழ்க்கைகள் அவனைச் சுற்றிச் சுழல்கின்றன. தனது இளமைக் காலத்துக் கனவுகளை அவன் நிஜமாக்கிவிட்டான். அவன் மேற்கொண்ட லட்சியமே அவனாகிப் போனான்.

என் இளைய வாசக நண்பர்களே!

நீங்களும்கூட உங்கள் இதயம் அவாவும் லட்சிய தரிசனத்தை அடையமுடியும். நினைவில் கொள்ளுங்கள். சோம்பேறியின் ஆசைகள் என்றும் நிறைவேறியதில்லை! உங்கள் லட்சியம் தாழ்வானதாக இருந்தாலும் சரி அல்லது உயர் லட்சியமாக இருந்தாலும் சரி,

அல்லது எந்தக் கலவையாயினும் சரி, எதை உங்கள் உள்மனம் உள்ளுக்குள்ளே ஆசையுடன் அவாவுகிறதோ அதை நோக்கி நீங்கள் ஈர்க்கப் படுவீர்கள். உங்கள் எண்ணங்களுக்கு ஈடான விளைவுகள் உங்கள் கைகளிலே தரப்படும். எதற்கு ஆசைப்பட்டு பாடுபடுகிறீர்களோ அது கிட்டும். கொஞ்சம் அதிகமாகவோ அல்லது குறைவாகவோ அல்ல— நீங்கள் பாடுபட்டதற் கேற்ப.

உங்களது இன்றையச் சூழ்நிலை எது வேண்டுமானாலும் இருக்கலாம். எப்படி இருந் தாலும் உங்கள் எண்ண்ங்களுக்கும், லட்சிய தரிசனத்திற்குமேற்ப நீங்கள் உயர்வீர்கள், அல்லது தாழ்வீர்கள், அல்லது அதே இடத்தில் நிற்பீர்கள். உங்களை ஆட்டிப்படைக்கும் அற்ப ஆசைக் கேற்ப சிறிய உருவம் பெறுவீர்கள். அல்லது உங்களது உயர் லட்சியத்திற்கேற்ப விசுவரூபம் எடுப்பீர்கள்.

ஸ்டான்டன் கிர்க்காப் டேவிசின் அழகிய வார்த்தைகளில் சொல்லப்போனால், "நீங்கள் ஒரு கணக்கெழுதுபவராக இருக்கலாம். ஆனால் எந்தக் கதவு இத்தனை நாள் உங்களது லட்சி யங்களின் பெருந்தடையாக இருக்கிறதென்று எண்ணினீர்களோ, அந்தத் தடையை எல்லாம் மீறி வெளியே நடப்பீர்கள்.

உங்களைக் கேட்க பெருங்கூட்டம்! கணக் கெழுதும் பேனா உங்கள் காதுக்கிடையில்!

மசியின் கசிவுக் கறை விரல்களுக்கிடையில்! உங்கள் ஆவேசச் சொற்பொழிவு மழையெனப் பொழிகிறது !

நீங்கள் ஆடு மேய்ப்பவராக இருக்கலாம். திசை தெரியாமல் நகர்ப்புறத்தில் சுற்றிக் கொண்டிருக்கலாம். திறந்த வாயுடன். கன்னங்களில் தொங்கும் சதையுடன். ஆத்மா வழி காட்ட, நீங்கள் அந்த மகத்தான தலைவனின் மாளிகைக்குள்ளே நுழைகிறீர்கள். கொஞ்ச காலம் கழித்து அந்தப் பெருமான் ''உனக்கு சொல்லிக் கொடுக்க, இனி ஒன்றுமில்லை,'' என்று சொல்லி வழி அனுப்புகிறார்.

இப்போது நீங்கள்தான் தலைவர். அப்படித்தான் சமீப காலத்தில், ஆடு மேய்த்துக் கொண்டே, பல பெரிய பெரிய விஷயங்களைச் சிந்தனை செய்தார் ஏசு என்ற அந்த மனிதர். இழைப்புளியையும் ரம்பத்தையும் கீழே வைத்து விட்டு, இந்த உலகைப் புனருத்தாரணம் செய்யும் பணியை நீங்கள் எடுத்துக்கொள்வீர்கள் !

சிந்தனை இல்லாதவர்கள், விஷயம் தெரியாதவர்கள், சோம்பேறிகள் எல்லாம் செயல்களின் விளைவுகளை மேம்போக்காகப் பார்க்கிறார்களே ஒழிய அதன் அடிப்படைக் காரணங்களைக் கவனிப்பதில்லை; ஆராய்வதில்லை. அதிர்ஷ்டம் என்றும் யோக காலம் என்றும், 'எதிர்பாராது ஏற்பட்டது' என்றும்

அவர்கள் பேசுகிறார்கள். செல்வந்தனாக வளர்பவனைப் பார்த்து ''எவ்வளவு அதிர்ஷ்டக்காரன்!'' என்று சொல்கிறார்கள். மற்றொருவன் மகா புத்திசாலியாக— மேதையாக— இருப்பதைப் பார்த்து ''அது ஆண்டவனின் அருள்'' என்று ஆச்சரியப்படுகிறார்கள். ஒரு தவயோகியின் பண்புகளையும், செல்வாக்கையும் பார்த்து ''எதிர்பாராத பல விஷயங்கள் ஒவ்வொரு திருப்பத்திலும் அவருக்கு உதவி இருக்கின்றன'' என்று கூறி சமாதானமடைகிறார்கள்.

அத்தகைய அநுபவத்தை அடைவதற்காக எவ்வளவு சோதனைகளுக்கும், தோல்விகளுக்கும், போராட்டங்களுக்கும் தங்களை உட்படுத்திக் கொண்டார்கள் என்பதை உலகம் அறிவதில்லை. எவ்வளவு தியாகங்களை மேற்கொண்டார்கள் என்பதை உலகம் உணர்வதில்லை.

சளைக்காத மனத்துடன், துணிவுடன் எவ்வளவு முயன்றார்கள் என்பதை பிறர் அறியமாட்டார்கள். தங்கள் லட்சியங்களை அடைய, திடமான நம்பிக்கையுடன், எவ்வளவு சங்கடங்களைக் கடந்து முன்னேறினார்கள் என்பதை உலகம் அறியாது. அவர்கள் சந்தித்த இருளையும், அநுபவித்த நெஞ்சு வலியையும் உலகம் அறிவதில்லை.

அவர்கள் பெற்ற பிரகாசமான வாழ்வையும் மகிழ்வையும் மட்டுமே பார்த்துவிட்டு, இவர்களை ''அதிர்ஷ்டக்காரர்கள்!'' என்று உலகம் கூவுகிறது. அவர்களது நெடிய கடும் பயணத்தை உலகம் அறிவதில்லை. அவர்கள் அடைந்த இனிய லட்சியங்களை மட்டுமே பார்த்துவிட்டு அவர்களுக்கு 'யோக காலம்' என்று உலகம் பேசுகிறது. எப்படி அந்த அதிர்ஷ்டம் ஏற்பட்டது என்ற வழிமுறைகளை உலகம் புரிந்து கொள்ள முயல்வதில்லை. விளைவை மட்டுமே பார்த்து பரவசமடைந்து ''எதிர்பாராத யோகம்'' என்று பேசுகிறது.

மனித வாழ்வின் எல்லா நிகழ்ச்சிகளிலும் முயற்சிகள் இருக்கின்றன; விளைவுகள் இருக்கின்றன. நமது முயற்சியின் வலிமைதான் விளைவின் அளவுகோல். அதுதான் உண்மை. அதிர்ஷ்டமல்ல.

வாழ்நாளில் நாம் பெற்ற பரிசுகள், நம்மிடமிருக்கும் சக்தி, வாழ்வுக்கு வசதிதரும் நம் வீட்டுப் பொருட்கள், அறிவு, ஆத்மிக பலம் எல்லாம் நம் முயற்சிகள் தந்த கனிகள். அவை எல்லாம் எண்ணங்கள் நிறைவுபெற்ற நிலை; லட்சியம் தன் இலக்கை அடைந்த நிலை; கனவுகள் நனவாகி வந்த நிலை.

உங்களது பெருமை தரும் கனவுகள்— உங்கள் இதய சிம்மாசனத்தில் கொலுவீற்றிருக்கும் லட்சியம்— இதை வைத்துத்தான் வாழ்வு எனும் மாளிகையைக் கட்டப் போகிறீர்கள்; இதுவாகத்தான் நீங்கள் மாறப் போகிறீர்கள்.

தீர்க்க தரிசிகளது லட்சியங்கள்—வாழும் லட்சியங்கள். ''ஒரு நாள் இது நிஜமாகும்'' என்ற நம்பிக்கையில் தான் மனித சமுதாயம் வாழ்கிறது.

# ஞானம் பெற்ற மோன நிலை

மனச்சாந்தி என்பது ஒரு அழகிய ஞான ஆபரணம். சுயகட்டுப்பாட்டின் பொறுமையான விளைவு. நீண்டகால பலன். பழுத்த அநுபவத்தின் அடையாளம் எண்ணங்களை என்ன சட்ட திட்டங்கள் ஆள்கின்றன என்பதைப்பற்றிய மேம்பட்ட அறிவு அது.

''தான் எண்ணங்களினால் உருவானவன்'' என்பதை எவ்வளவுக் கெவ்வளவு புரிந்து கொள்கிறானோ அந்த அளவுக்கு மனிதன் அமைதி பெறுகிறான்; சாந்தி பெறுகிறான். இந்த அறிவு பிறரைப்பற்றி நன்கு அறிந்து கொள்ள உதவுகிறது. சரியான படி புரிந்து கொள்ளும்போது, உள்ளுக்குள்ளே எண்ணங்கள் ஒன்றுக்கொன்று எப்படி பின்னி பிணைக்கப்பட்டிருக்கின்றன— இவை எல்லாம் எப்படிப்பட்ட காரண காரியங்களின் விளைவுகள்- என்பதைப் பற்றிய தெளிவு ஏற்படுகிறது. அதன்பின், அவன் சலித்துக் கொள்வதை— கோபப்படுவதை நிறுத்திக் கொள்கிறான்; கவலைப்படுவதையும், வருத்தப்படுவதையும் விடுகிறான்; ஞானம் பெற்ற மோன நிலையில், அதே குறிக்கோளாக, நிர்மலமான நிலையில் அமர்ந்திருக்கிறான்.

அமைதி பெற்ற மனிதன்—தன்னை எப்படி கட்டுப்படுத்திக் கொண்டு ஆள்வது என்பதைத் தெரிந்து கொண்டவன். எப்படி இந்த சமுதாயத் துடன் இயைந்து செயல்படுவது என்ற சமூக கண்ணோட்டத்தைப் புரிந்து கொண்டவன். பதிலாக; மக்கள் அவனு டைய ஆத்மிக வலிமையைப் போற்றுகிறார்கள். அவனை நம்பலாம் என்பதையும், அவனிட மிருந்து பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள லாம் என்பதையும் உணர்கிறார்கள். ஒரு மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு ஞானம் பெற்ற மோன நிலை பெறுகிறானோ அந்த அளவுக்கு அவனது, வெற்றியும் செல்வாக்கும், நன்மை செய்யும் தன்மையும், உயர்கின்றன.

சுய கட்டுப்பாடும், ஒழுங்கும், நியாயமும் உயர்ந்து நிற்கும்போது ஒரு சாதாரண வியாபாரி கூட தனது தொழில் பெருகுவதை உணர்வான். ஏனெனில் சத்தியத்திற்கு கட்டுப் பட்டு, நியாயத்துடன் இயங்கும் ஒருவனுடன் வியாபாரம் செய்வதை விரும்பி மக்கள் வரவேற் பார்கள்.

அமைதியும், வலிமையும் பெற்ற மனிதன் நேசிக்கப் படுகிறான்; போற்றப் படுகிறான். வியர்த்துக் கொட்டுகின்ற வெயில் காலத்தில் அப்படிப்பட்ட மனிதன் ஒரு இதந்தரும் மரமாக நிழல் தருகிறான்; ஒரு புயலுக்கு அடைக்கலம் தரும் பாதுகாப்பு பாறையாகத் திகழ்கிறான்.

இத்தகைய அமைதி பெற்ற இதயத்தை, இனிமையான சுபாவத்தை, சமத்துவ நோக்கில் வாழ்வு நடத்தும் மனிதனை— யார் விரும்பாமல் இருக்க முடியும்? மழை பெய்தாலும் சரி, வெயிலடித்தாலும் சரி, எந்தவிதமான மாறுதல்கள் வந்தாலும் சரி, அப்படி ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் இனிமையாகவும், அமைதியாகவும், உயர்சாந்தி நிலையைப் பெற்றவர்களாகவும் இருக்கிறார்கள்.

எதையும் பொறுமையுடன் இனிமையாக எடுத்துக்கொள்ளும் குணம், பண்பாடு என்கிற பாடத்தின் கடைசி அத்தியாயம்— ஞானம் பெற்ற மோன நிலை. நிர்மலமான சாந்தி நிலை. அங்கே வாழ்வு பூத்து மலர்ந்து நிற்கிறது; ஆத்மா கனிந்து பழமாகி இருக்கிறது. அந்த மோன நிலை, ஞானம் போன்று அரிதானது. பொன்னைவிட அதிகம் போற்றப்படுவது.

ஆழ்ந்து அவிந்து அடங்கிய ஒரு நிர்மலமான வாழ்க்கையுடன் ஒப்பிடும்போது வெறும் பணம் சம்பாதிக்கும் வாழ்க்கை அற்பமானதாக— அர்த்தமற்றதாகத் தோன்றுகிறது. அந்த ஞானம் பெற்ற நிலை அமைதியாக உண்மை என்ற கடலினடியில் வாழ்கிறது. அலைகளுக்கடியில். மேலே வீசும் புயல்களெல்லாம் போக முடியாத ஆழத்தில். நிரந்தரமான சாந்தியில்.

இனிமையும் அழகும் நிறைந்த வாழ்வை தனது கோப வெடிப்பால் பாழ்படுத்திக் கொண்டவர்கள் எத்தனை பேர்? அமைதியும் இனிமையும் கொண்ட ஒழுங்கான ஓட்டத்தை, அழித்துக் கொண்டவர்கள் எத்தனை பேர்? வாழ்வை புளிக்கும்படி செய்து தன்னுடலில் கெட்ட ரத்தத்தை ஓடச் செய்தவர்கள் எத்தனை பேர்?

பெரும்பாலான மக்கள் சுய கட்டுப்பாடு இல்லாமல் தங்கள் மகிழ்வையும் வாழ்வையும் பாழ்படுத்திக் கொள்கிறார்கள் என்பதுதான் சிந்தனைக்குரிய விஷயம். நாம் சந்திக்கும் ஒரு சிலர் தான் நியாயமும், நிதானமும், பொறுமையும், அழகும் கொண்ட வாழ்க்கையை நடத்துகிறார்கள்! அவர்களிடம் மனித குணங்கள் ஒரு பூரணத்துவம் பெற்ற நிலையை காண்கிறோம். அமைதியான வாழ்வின் ஒரு ஒழுங்கான ஓட்டத்தைக் காண்கிறோம்!

மனித இனம், கட்டுக்கடங்காத ஆசைகளினால் கொந்தளித்துக் கொண்டிருக்கிறது; கட்டுப்படுத்த முடியாத துயரங்களினால் தத்தளித்துக் கொண்டிருக்கிறது. சந்தேகம் தவிப்பு என்பனவற்றால், அலைக்கழிக்கப்படுகிறது.

ஞானம் பெற்ற மனிதன்— எண்ணங்களை கட்டுப்படுத்தித் தூய்மையாக்கிக்கொண்ட

மனிதன், தனது ஆத்மாவில் அலைமோதுகின்ற, காற்றையும் புயலையும் தன்னிஷ்டப்படி பணிய வைக்கிறான்.

வாழ்க்கைப் புயலால் பந்தாடப்படும் ஆத்மாக்கள்— அவர்கள் என்ன நிலையிலிருந்தாலும் இதைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

வாழ்க்கை என்ற கடலில், அருள் மிகுந்த இன்பத் தீவுகள் புன்னகை புரிந்தவண்ணம் இருக்கின்றன. லட்சியம் என்ற கடற்கரை சூரிய வெளிச்சத்துடன் உங்கள் கப்பலை வரவேற்கக் காத்திருக்கிறது. எண்ணங்களின் தலைமைப் பீடத்தில் கைவைத்து உறுதியுடன் உங்கள் கப்பலைச் செலுத்துங்கள்.

ஆத்மாவின் கோயிலிலே ஆணையிடும் தலைவன் வீற்றிருக்கிறான். அவன் இப்போது தூங்குகிறான். விழிக்கச் செய்யுங்கள். சுய கட்டுப்பாடு தான் வலிமை; அமைதியான மனம் தான் சக்தி. உங்கள் நெஞ்சிடம் சொல்லுங்கள் "அமைதியே! நிர்மலமான சாந்தியே! நீ அப்படியே என்னுடன் என்றும் நின்று கொண்டிரு!"

ஓம் சாந்தி!



எண்ணங்களை ரகசியமாக வைத்துக் கொள்ளலாம் என்று மனிதர்கள் நினைக்கிறார்கள். அது உண்மையல்ல. எண்ணத்தை யாரும் மறைக்க முடியாது. ஏனெனில் எண்ணம், பழக்கமாகவும் பின் சூழ்நிலையாகவும் வெளிப்படுகிறது.

(ஒவ்வொரு எண்ணமும் எந்த விதமான பழக்கமாகி, என்ன சூழ்நிலையை உருவாக்குகிறது என்பதைக் கவனமாக 64-ம் பக்கத்தில் துவங்கும் புள்ளியிடப்பட்ட அட்டவணையில் காணுங்கள். அந்த எண்ணங்களின் பகுப்பையும், தொகுப்பையும்- தெளிவையும் அடுத்தப் பக்கங்களில் வரும் பிற்சேர்க்கையில் காணுங்கள்)

## பிற்சேர்க்கை—I

| நல்லெண்ணங்கள் | பழக்கங்கள் / மனோபாவம் | சூழ்நிலை |
|---|---|---|
| 1. எதைப் பற்றியும் இனிமையாகப் பாராட்டும் எண்ணங்கள். | கருணை உள்ளம். அரவணைக்கும் அன்பு. | சுமூகமான உறவுகள். கலகலப்பான இனிய சூழ்நிலை. |
| 2. தூய்மையான எண்ணங்கள். | நிதானம், சுயகட்டுப்பாடான மனோபாவம். | சாந்தம், அமைதி. |
| 3. தைரியம், தன் காலில் நிற்கும் எண்ணம் தீர்மானமான நிலை, | ஆண்மை நிறைந்த பழக்க வழக்கங்கள். | வெற்றி, அபரிமிதமான செல்வம், சுதந்திரம். |
| 4. செயல்படத் தூண்டும் துடிப்பான எண்ணங்கள். | சுத்தம், உழைப்பு | இனிமை, அரவணைப்பு. |
| 5. சாந்தமான எண்ணம். மன்னிக்கும் மன நிலை | இதமான, சாந்தமான பழக்க வழக்கங்கள் | பாதுகாப்பு, நீடித்த நிம்மதி. |
| 6. தன்னலமற்ற எண்ணங்கள், அன்பான எண்ணங்கள். | தன்னைப் பற்றிய நினைவில்லாது பணி புரியும் பழக்கம். | நிச்சயமான, நிரந்தரமான, அபரிமிதமான, உண்மையான செல்வம். |

| தீய எண்ணங்கள் | பழக்கங்கள் / மனோபாவம் | சூழ்நிலை |
|---|---|---|
| 1. மிருக உணர்வுகள், இச்சைகள். | குடி போதை, காம வாழ்க்கை. | அழிவு, நோய். |
| 2. தூய்மையற்ற எண்ணங்கள். | தளர்வு, குழப்பமான மன நிலை. | கவனத்தைத் திருப்பும் அநுபவங்கள், விரும்பியதற்கு எதிரான விளைவுகள். |
| 3. பயம், சந்தேகம், முடிவெடுக்கத் தயங்கும் நிலை. | பலகீனம், ஆண்மையற்ற பழக்கங்கள், உறுதியற்ற மனோபாவம். | தோல்வி, வறுமை, அடிமையாக சார்ந்திருத்தல். |
| 4 சோம்பல், எண்ணங்கள். | சுத்தமில்லாத பழக்கங்கள், நாணயமின்மை. | தவறான பாதையில் செல்லும் சூழ்நிலை, பிச்சை எடுக்கும் நிலை. |
| 5. வெறுப்பு, கண்டனம். | பிறரை குற்றஞ்சாட்டும் பழக்கம், வன்முறை. | மனக்காயம், உடற்காயம், பிறர் நம்மைப் பழி வாங்குகிறார்கள் என்ற நிலை. |
| 6. சுயநலமான எண்ணங்கள். | எதிலும் சுயலாபம் தேடும் பழக்கம், தன்னை முன்னிறுத்தும் போக்கு. | எந்தப் பக்கம் திரும்பினாலும் துன்பத்தில் உழலும் நிலை. |

## பிற்சேர்க்கை—III

| நீங்கள் விரும்பும் சூழ்நிலை | வளர்க்க வேண்டிய எண்ணங்கள் |
| --- | --- |
| 1. நிரந்தரமான செல்வம், வளம். | தன்னலமற்ற எண்ணம்; அன்பான உள்ளம். |
| 2. சுமூகமான உறவுகள், கலகலப்பான சூழ்நிலை. | எதைப்பற்றியும் பாராட்டும் அழகான எண்ணங்கள். |
| 3. சாந்தம், அமைதி. | தூய்மையான எண்ணங்கள். |
| 4. வெற்றி, அபரிமிதமான செல்வம், சுதந்திரம். | தைரியம், தன் காலில் நிற்கும் மனோபாவம். |
| 5. இனிமை அரவணைப்பு. | செயலைத் தூண்டும் துடிப்பான எண்ண நிலை. |
| 6. பாதுகாப்பு, நீடித்த ஆரோக்கியம். | மன்னிக்கும் மனோபாவம் சாந்தம். |
| 7. உலகம் உங்களுக்கு உதவ. | பாவகரமான எண்ணங்களை அகற்றுங்கள் |
| 8. வாழ்வில் நல்ல வாய்ப்புக்கள் பொங்க | பலகீனமான அவல எண்ணங்களை அகற்றுங்கள். |
| 9. மோசமான சூழ்நிலையிலிருந்தும் அவமானத்திலிருந்தும் விடுபட | மனத்தில் நல்லெண்ணங்களை வளருங்கள். |

**பிற்சேர்க்கை—IV**

| இத்தகைய சூழ்நிலையால் கஷ்டப் படுகிறீர்களா ? | உங்களை அலைக்கழிக்கும் எண்ணம் இது தான். |
|---|---|
| 1. அழிவு, சரிவு, நோய். | மிருக உணர்வுகள், கோபம் சீற்றம், வன்முறை. காம இச்சைகள். |
| 2. விரும்புவதற்கு நேர் எதிர்மாறான கவனத்தை திருப்பும் நிகழ்ச்சிகள் | தூய்மையில்லாத எண்ணங்கள், (நேர்மையின்மை, தந்திரம், ஏமாற்று வஞ்சனை எண்ணங்கள்.) |
| 3. தோல்வி, வறுமை, அடிமையாக பிறரை சார்ந்திருத்தல். | எதிலும் சந்தேகம், பயம், முடிவெடுப்பதில் தயக்கம். |
| 4. பிச்சை எடுக்கும் நிலை. தவறான பாதையில் செல்லுதல் | சோம்பல் எண்ணங்கள். |
| 5. மனக்காயம் பட்டு கஷ்டப்படுகிறீர்கள், உடற்காயம் பட்டு அவதிப்படுகிறீர்கள். பிறர் நம்மைப் பழிவாங்கும் சூழ்நிலை. | வெறுப்பு நிறைந்த எண்ணங்கள், கண்டனம், திட்டுதல், குறை காணுதல். |
| 6. எந்தப் பக்கம் திரும்பினாலும் துன்பம். | சுயநலம்; பிறர் எக்கேடு கெட்டுப் போனால் என்ன என்ற அலட்சியம். |

# “தம்பி ! உன்னை வளர்த்துக்கொள்”

இருக்கிற நிலைகளை அப்படியே ஏற்றுக் கொண்டு நிரந்தரமாக அதே நிலையில் வாழவேண்டும் என்று யாரும் சொல்லவில்லை. இருக்கிற நிலைகளை நாம் விரும்பும்படி மாற்ற முயல வேண்டும். அதுதான் முயற்சி ; அதுதான் ஜீவனின் இயல்பு.

அதே போலத்தான், ஏழ்மையும். ஏழ்மை கடவுளின் விருப்பமல்ல. நீ நிரந்தரமாக ஏழையாகவே இருக்க வேண்டுமென்று யாரும் சொல்லவில்லை. உன் மனத்தை உற்சாகமாக வைத்துக் கொள்வது எப்படி உன் கையிலிருக்கிறதோ, அதேபோல உன் உழைப்பால், சிந்தனையால் உன் விதியை நிர்ணயித்துக் கொள்வதும் உன் கையில்தானிருக்கிறது.

நீ இளைஞன். முதலில் உன் வாழ்வை உயர் குணங்களால்—வலிமையான பழக்க-வழக்கங்களால்—தன்னம்பிக்கை தரும் எண்ணங்களால்—ஆழ்ந்த நம்பிக்கையால்—உன்னை நீ உயர்த்திக்கொள்.

பின் நீ “இந்த சமுதாயத்தின்” உறுப்பினன் என்ற நிலையில் என்ன செய்ய முடியும் என்று எண்ணிப் பார். ஊருக்கு நன்மைசெய்ய — உன் வலிமையை வளர்க்க — ஒரு அமைப்பை ஏற்படுத்திக்கொள்.

கூட்டு மனப்பான்மையுடன் இயக்க நண்பர்களுடன் சேர்ந்து நல்ல காரியங்களுக்கு கைகொடு, ஒரு முடிவெடுத்தபின் அம்முடிவை ஏற்கும் கட்டுப்பாட்டை வளர்த்துக்கொள். ஒரு காரியத்தை நிறை

வேற்றும் கடும் உழைப்பைக் கொடு. மனத்தைச் சுதந்திரமாக மகிழ்வுடன் பறக்க விடு. ஊர் உலக நன்மைக்காக நாம் நம்மை அர்ப்பணித்துக் கொள்ளும்போது தான் இப்பிரபஞ்சத்துடன் சேர்ந்து இயங்குகிறோம்.

இளமைப் பருவ அனுபவங்களின் மீது பழி போடுவதற்குப் பதிலாக எங்கு செல்ல வேண்டு மென்று யோசி. லட்சியங்களில் கவனத்தை வை.

பிறருடைய அங்கீகாரத்திற்கோ, பாராட்டுக்கோ எதிர்பார்த்து ஏங்கி நிற்கும்போது நாம் நம் சுயத்தன் மையை இழந்து விடுகிறோம்.

எப்படி வர விரும்புகிறோமோ — தொழிலி லும் சரி— சொந்த வாழ்விலும் சரி அதை மனத்தில் படம் பிடி. துணிவுடன் காரியங்களைச் செய். பயப் பட வேண்டாம்.

"தைரியமும் தன்னம்பிக்கையும்" என்று கூறுவது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து முத்திரை, தைரியத்தையும் தன்னம்பிக்கையையும் கொள்.

நீ இருக்கும் அமைப்பிற்கு விசுவாசமாக நடந்து கொள். உன்னை முன்னிறுத்தாது பொது லட்சியத் திற்காக மாபெரும் கூட்டுணர்வை வளர்த்துக்கொள். கட்டுப்பாடுடன் எப்போதும் இரு.

தம்பி உன் திறமைகளை உனக்கும் இவ்வுலகிற்கு மாக வெளிக் கொணர்ந்திடு. வாழ்ந்து காட்டு வாழ்த்துக்கள்.

● ●

# எம்.எஸ். உதயமூர்த்தி

## வாழ்க்கைக் குறிப்பு

மனவியலைப் பற்றித் தொடர்ந்து கடந்த இருபத்தி ஐந்து ஆண்டுகளுக்கு மேலாக தமிழ்ப் பத்திரிக்கைகளில் கட்டுரைகள் எழுதி வருபவர் டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி. மனோதத்துவங்களை வாழ்க்கைக்கு எப்படிப் பயன்படுத்துவது என்பதைச் சுமார் 14 நூல்களில் வடித்துத் தந்திருக்கிறார் அவர். சிறந்த ஆசிரியர் என்ற விருதும், 'புல் பிரைட்' அறிஞர் (Fulbright Scholar) என்ற கௌரவமும் இவருக்கு உண்டு.

எம்.எஸ். உதயமூர்த்தி விளநகர் என்ற கிராமத்தில், மயிலாடுதுறை தாலுக்காவில் தஞ்சை மாவட்டத்தில் பிறந்தவர். இவரின் பெற்றோர் திரு. சிங்காரம், கமலம்மாள் ஆவார். மயிலாடுதுறை உயர் நிலைப்பள்ளியில் படித்த பின் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் இளநிலை பட்டப்படிப்பும், முதுநிலைப் பட்டப்படிப்பும் பெற்றார். சென்னை பல்கலைக் கழகத்தில் தனது பாடமான வேதியியலில் மற்றோர் முதுநிலைப் பட்டம் பெற்றபின் மேல் படிப்புக்கு அமெரிக்கா சென்றார்.

அமெரிக்கா செல்லுமுன் சீர்காழி இந்து உயர் நிலைப் பள்ளியிலும், குடந்தை அரசினர் கல்லூரியிலும் ஆசிரியராகப் பணியாற்றினார். பின் கிண்டி பொறியியற் கல்லூரியில் உதவி பேராசிரியராக பணி புரிந்தார்.

அமெரிக்காவில் விஸ்கான்சின் பல்கலைக் கழகத்தில் மருத்துவ ரசாயனத்தில் 'டாக்டர்' பட்டம் பெற்று ஒரு பத்தாண்டுகள் விஸ்கான்சினிலுள்ள மவுண்ட் செனாரியோ கல்லூரியிலும் மின்ன சோட்டா, ஐடகோ பல்கலைக் கழகங்களிலும் பேராசிரியராகப் பணியாற்றினார்.

பின் ஆசிரியத் துறையை விட்டு விலகி, விஸ்கான்சினில் உணவு தயாரிக்கும் நிறுவனம் ஒன்றில் அதன் தலைமை நிர்வாகியாக நான்காண்டுகள் பணியாற்றினார். 1982-ல் (Barclay Chemicals) பார்கிளே கெமிக்கல்ஸ் என்ற ரசாயனப் பொருள்களை உற்பத்தி செய்யும் தனது சொந்த நிறுவனத்தைத் துவங்கினார். "அமெரிக்காவில் தொழில் துறையில் உள்ளவர்கள் யார் யார்" என்ற நூலில் (Directory of Who is Who in Business and Finance in the U.S.A.) அவரது பெயர் இடம் பெற்ற பெருமையும் இவருக்குண்டு. அந்நிறுவனத்தை தனது குமாரரிடம் ஒப்படைத்து விட்டு 1987-ல் நிரந்தரமாக இந்தியா வந்தார். இன்று சென்னையில் வசிக்கின்றார் அவர்.

சுய வளர்ச்சி பெற வாசகர்கள், 'எண்ணங்கள்' 'மனம், பிரார்த்தனை, மந்திரம்', 'நெஞ்சமே அஞ்சாதே நீ', 'தட்டுங்கள் திறக்கப்படும் என்ற அவரது நூல்களைப் படியுங்கள்.

சுய பொருளாதார மேம்பாடு பெற அவரது 'சிந்தனை, தொழில், செல்வம், என்ற நூலை தாரக மந்திரமாக உபயோகியுங்கள்.

சமுதாய ஈடுபாட்டின் அவசியத்தை உணர அவரது 'நாடு எங்கே செல்கிறது' என்ற நூலையும், 'நம்மால் முடியும் தம்பி, நம்பு', 'நீ தான் தம்பி

முதலமைச்சர்'' என்ற நூல்களையும் படித்துப் பாருங்கள்.

எம்.எஸ். உதயமூர்த்தியின் உந்துதல்கள் கன்யாகுமரியிலிருந்து கிருஷ்ணகிரி வரை, வேதாரண்யத்திலிருந்து வால்பாறை வரை இளைஞர்களை, பெண்களை படித்த மக்களை ஒரு உத்வேகம் பெறச் செய்திருக்கிறது. டைரக்டர் பாலசந்தர், 'உன்னால் முடியும் தம்பி' என்ற தலைப்பில், கதாநாயகனுக்கு உதயமூர்த்தி என்ற பெயரைச் சூட்டி, ஒரு திரைப்படத்தை வெளியிட்டிருக்கிறார். பாலசந்தரிலிருந்து பள்ளி இளைஞர்கள் வரை, அவரது எழுத்துக்கள் ஒரு பாதிப்பை ஒரு உத்வேக உணர்வை ஒரு நம்பிக்கையை உருவாக்கி இருக்கிறது. இதன் விளைவாக, ஒரு அமைதியான மாற்றம் நாட்டில் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது.

தனது அறிவுக்கும், திறமைக்கும் ஏற்ற ஒரு புதிய சமுதாயத்தைத் தமிழகம் பெற வேண்டும் என்று விரும்பும் எம்.எஸ். உதயமூர்த்தி, இதற்காக மக்கள் சக்தி இயக்கம் என்ற ஒரு புதிய இயக்கத்தை ஆரம்பித்திருக்கிறார்.

தொகுப்பு : G. **சீனிவாசன்** Ex. P.T.C.

# மக்கள் சக்தி இயக்கம்

உயர் லட்சியங்களுக்காக ஓர் இயக்கம். இளைஞர்களாலான இயக்கத்தை வைத்து சாதனைகளால் ஒரு பரிபூரண சமுதாயமாற்றத்தை ஏற்படுத்த மக்கள் சக்தி இயக்கம் தன்னை அர்ப்பணித்துக் கொள்கிறது. "நாடு நலம் பெற வேண்டும், வளம் பெற வேண்டும், தமிழர்களது அறிவுக்கும் திறமைக்கும் ஈடான ஓர் உன்னதமான தமிழ்ச் சமுதாயத்தை நாம் உருவாக்க வேண்டும். நல்லவர்களும், படித்தவர்களும், நாட்டின்பால் அக்கறை கொண்டு 'இது எனது நாடு' என்ற உணர்வுடன், பொது வாழ்வில் இறங்க வேண்டும். இதற்காகப் பல தியாகங்களையும், தேவையானால் சில காயங்களையும் ஏற்றுக் கொள்ளத் தயாராகும்போதுதான் இந்த நாட்டில் மாற்றம், அடித்தளத்தில் வேர்விடும்!" இந்தக் கொள்கைகளை முன்வைத்து மக்கள் சக்தி இயக்கம் செயல்படுகிறது.

மக்கள் சக்தி இயக்கம் சுய வளர்ச்சி, சுய பொருளாதார மேம்பாடு, சமுதாய விழிப்புணர்ச்சி என்ற மூன்று குறிக்கோள்களைக் கொண்டது.

**சுய வளர்ச்சி :**

ஆன்மீக அடிப்படையில் உயர்வாழ்க்கை நெறிகளுடன் கூடிய தனிமனித வளர்ச்சியில்தான்—சமுதாய வளர்ச்சி இருக்கிறது. முடிவெடுக்கும் திறன், லட்சியத்தெளிவு, முன்னேறும் ஆர்வம், முன்னேற்றத்திற்கான திட்டங்கள்,

சளைக்காத மனம், செயல் என்று, சுய வளர்ச்சியின் பல்வேறு பாகுபாடுகளையும் இன்றைய மனவியல் அறிவு நமக்குப் போதிக்கிறது. சுய வளர்ச்சி பெற்ற தனி நபர்களாலான சமுதாயம்தான் ஒரு முழு வளர்ச்சி பெற்ற சமுதாயமாக அமையும்.

**சுய பொருளாதார மேம்பாடு :**

தமிழ் நாட்டில் சொந்தக் காலிலே நின்று சுய தொழில் செய்ய வேண்டுமென்ற மனோபாவம் தமிழர்களிடையே குறைவு. கஷ்ட நஷ்டங்களை ஏற்று சுய தொழில் செய்து உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்ற நிலை தமிழ்நாட்டில் என்றைக்கு ஏற்படுகிறதோ, அன்றுதான் தமிழ்நாட்டின் மொத்த வருமானமும், தமிழனின் சராசரி வருமானமும் அதிகமாகும்.

**சமுதாய விழிப்புணர்ச்சி:**

இந்தியாவில் படித்தவர்களுக்கும், பாமரர்களுக்கும், பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் உள்ள இடைவெளி அதிகமாகிக் கொண்டு வருகிறது. அந்த அடித்தளத்து மக்களை நம்முள் ஒருவராய் எண்ணி, அவர்களுக்குக் கைகொடுத்துத் தூக்கிவிடும்போதுதான் நம்மை நாம் ஒரு முழு மனிதனாகவும், நமது சமுதாயத்தை ஒரு வளர்ச்சி பெற்ற சமுதாயமாகவும் நாம் கருத முடியும்.

நம்மால் முடியும் தம்பி என்பது நமது தாரக மந்திரமாகும்.

தமிழர்களின் அடிப்படை மனோபாவங்கள் மாறாத வரை எந்தவித கல்வி அபிவிருத்தியிலோ, பொருளாதார வளர்ச்சியிலோ ஒரு நிரந்தரமான மாற்றத்தைக் கொண்டு வர இயலாது.

வழிபட்டுத் துதிபாடும் தமிழர்களது மனோபாவம், நெளிவெடுத்து வேலை செய்யும் மனோபாவம், புதியன காணத்

தயங்கும் சம்பிரதாய மனோபாவம், பொது சுகாதாரத்தில் அக்கறையற்ற நிலை, சுய தொழில் செய்யப் பயப்பட்டு ஊழியம் செய்யப் புறப்படும் மனோபாவம்.

நமது வரியில்தான் இந்த அரசாங்கம் செயல்படுகிறது. அதை நிர்வகிப்பதில் நமக்கும் பங்குண்டு என்கிற பொறுப்பை மக்களுக்கு உணர்த்த வேண்டும்.

ஜனநாயகம் சரியாகச் செயல்பட, அரசியல் கடிவாளங்களான நீதி மன்றம், அரசாங்கநிர்வாகம், சட்டசபை, பத்திரிகைகள் எல்லாம் தனித்து நின்று நாட்டின்பால் அக்கறை கொண்டு பாரபட்சம் பார்க்காமல், தவறு கண்டவிடத்துத் திருத்தும் துணிவு பெற்ற அரசியல் அங்குசங்களாகச் செயல்பட வேண்டும்.

நடைமுறை வாழ்வில்-எளிமையாகவும் இனிமையாகவும் அனைவரோடும் பழகுங்கள். முக்கியத்துவம் பெறவேண்டும் என்ற வேட்கையை மனதில் வளர்த்துக் கொண்டு, சுய லாபம் கருதி பொது சேவை செய்ய வராதீர்கள். ஆடம்பரமான தோரணையும், ஜபர்தஸ்தான தோற்றங்களும் அசிங்கமான அரசியல்வாதிக்கு மட்டுமே உரியது என்று ஒதுக்கி விடுங்கள்—தற்பெருமை பேசுவதனால் நாம் பிறர் துயரங்களை போக்கிட முடியாது. குறுக்கு வழியில் பணம் சேர்த்தவர்களையும் நெறியற்ற வாழ்வை வாழ்ந்து கொண்டு அரசியலில் படாடோபமாய் வலம் வருகின்றவர்களையும் தூசுக்குச் சமமாய் நினையுங்கள்—புறக்கணியுங்கள்.

தனி மனித வளர்ச்சி பெற்று வளமான வாழ்வு வாழத் துடிக்கும் மனித உணர்வு, சமுதாய ஈடுபாடு என்ற குணத்தால் இந்தப் பிரபஞ்சம் முழுவதையுமே தொடுகிறது. அந்த ஆத்மீக அடிப்படையில்தான் மக்கள் சக்தி இயங்குகிறது! நம்மை எல்லாம் தொடுகிறது. மக்கள் அனைவரையும் இணைக்கிறது. வாழ்க வையகம்! வாழ்க வளமுடன்!!

நன்றி;

குமுதம், ஜூன் **21, 1990**

## இயக்கப் பத்திரிக்கை

'நம்பு தம்பி நம்மால் முடியும்' *மாதப் பத்திரிக்கைக்கான ஆண்டுச் சந்தா 20 ரூபாய். மக்கள் சக்தி இயக்கத்தில் என்ன நடக்கிறது. என்ன செய்யலாம் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.*

முகவரி :

**தலைமையகம், மக்கள் சக்தி இயக்கம்,**
**17A, சௌத் அவென்யூ, பஸ் நிலையம் அருகில்,**
**திருவான்மியூர், சென்னை – 600 041.**

## காலம் ஒரு நாள் மாறும் !

கொள்கைகள், உண்மைகள் என்பதற்காக சொன்ன உடனே யாரும் ஏற்றுக் கொண்டதில்லை. உலகம் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதற்காக எதையும் நாம் விட்டுவிடக் கூடாது. நாம் செய்வதில் நியாயம் இருக்கும் போது உலகம் ஒருநாள் அதற்கு தலைவணங்கப் போவது உண்மை.

—தாமஸ் பெயின்

